6

# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

**இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்**

15.2/78

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு


| சிலம்பு ௫௨ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, தை பிப்ரவரி 1978 | பரல் ௬ |
|---|---|---|


## நூற்பதிப்புத் துறையும் கழகத்தின் நிலையும்

அரிய பெரிய இலக்கண இலக்கியங்களும், சிற்றிலக்கியங்களும், கலை நூல்களும் ஆகிய தமிழ் நூல்கள் பலவற்றுள்ளும் அழிந்தொழிந்தனவும் அழிக்கப்பட்டனவும்போக எஞ்சியனவாக இன்றுகாறும் நின்று விளங்கும் ஏனைய நூல்கள் எத்துணை அருமுயற்சியின் பயனாக ஓலைச் சுவடிகளினின்றும் அச்சிற் பதிக்கப்பட்டன என்பது பற்றியும் அம் முயற்சியில் ஈடுபட்ட நிறுவனங்கள் பலவும் பெருமக்கள் பலரும் எவ்வளவு இன்னல்களுக்கிடையில் தாம் மேற்கொண்ட பணியை நிறைவேற்றினர் என்பது பற்றியும், நூற்பதிப்பு நிறுவனங்கள் பல மடிந்தமை பற்றியும், பற்பல நூல்கள் மறுபதிப்பும் வரவியலாது அழிவுற்றுக் கொண்டிருக்கின்றமை பற்றியும் செல்வியின் 45, 46ஆம் சிலம்புகளிலும், 49, 50 ஆம் சிலம்புகளிலும் வெளிவந்த 'பதிப்புத்துறையில் பட்டறிவு', 'நூற்பதிப்பகங்கள் மடிவதேன்', 'நூற்பதிப்புத் துறைக்கு நேர்ந்துள்ள நெருக்கடி' ஆகிய தொடர் கட்டுரைகளிலும், பிறவற்றிலும் விளக்கப்பட்டுள்ளன.

கடந்த ஐம்பத்தெட்டு ஆண்டுகட்கு முன் கூட்டுப்பங்கு நிறுவனமாகத் தோற்றுவிக்கப்பட்டுத் தனக்கென வகுத்துக் கொண்ட கோட்பாட்டினின்றும் பிறழாது இதுகாறும் 1675 நூல்களை வெளியிட்டுள்ள நமது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் எத்தகைய இடர்ப்பாடுகட்கிடையில் தன் பணியைச் செய்துகொண்டு வருகிறது என்பது பற்றியும் கழகம் தளராது நடைபெற வேண்டிய இன்றியமையாமை பற்றியும், அதற்குத் தமிழ்ப் பெருமக்கள் மேற்கொள்ளத்தக்க நன் முயற்சிகள் பற்றியும் ஈண்டுக் காண்போம்.

பழந்தமிழ் இலக்கியங்கள் முதல் இக்காலத்துச் சிறந்த நூல்கள் வரை யாவற்றையும் செவ்விய முறையில் அச்சியற்றி வெளியிட்டு, ஆசிரியர் தவத்திரு மறைமலையடிகளார் வகுத்த நெறியைக் கடைப்பிடித்து, எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்னும் கோட்பாட்டை முன்வைத்துச், செந்தமிழையும் சிவநெறியையும் இரு கண்ணாகக்கொண்டு போற்றி, அவற்றின் வளர்ச்சிக்கான ஆக்கப் பணிகளைப் பல துறையினும் மேற்கொள்ளுவதே கழகத்தின் அடிப்படை நோக்கமாகும். இச்சீரிய நோக்கத்தை உயிர்மூச்சாகக் கொண்டே கழகம் இன்று வரை நடையிட்டு வந்திருக்கின்றது; இனியும் நடையிட முனைந்து நிற்கின்றது.

ஆட்சிமொழி, பயிற்றுமொழி, அறமன்றமொழி, வழிபாட்டு மொழி, வாழ்வியற் சடங்குகள் முதலிய பல்வேறு துறைகளிலும் கழகம் தன் முத்திரையைப் பதித்துள்ளது. சிறந்த நூல் நிலையங்களையும் கலைமன்றத்தையும் நடத்துதல் முதலிய அறப்பணிகளையும் பலரும் பாராட்டும் வண்ணம் சிறப்புறச் செய்து வருகின்றது. செந்தமிழ்ச் செல்வியைச் சீருற நடத்திப் பொன்விழா கண்டு பொலிவுற விளங்குகின்றது தமிழறிஞர் பெருமக்களின் வரலாறும் உருவப் படங்களும் தொகுத்தல், இலக்கிய மாநாடுகள் நடத்தல், பரிசுத் திட்டங்கள் வகுத்துப் புது நூல்கள் ஆக்கப்படவும் நூலாசிரியர்கள் போற்றப்பெறவும் செய்தல் முதலிய பற்பல பணிகளையும் கழகம் தன் கொள்கைவழி நின்று செப்பமுறச் செய்து வருகின்றது.

எந்த ஒரு நாடும் சிறப்புற முன்னேற வேண்டுமானால் அறிஞர் பெருமக்கள் ஆக்கிய சிறந்த நூல்களைக் கற்றலும், அவ்வழி யொழுகுதலும் அச் சான்றோர் வரலாறுகளை யறிந்து போற்றுதலும் இன்றியமையாதனவாம். உயர் தனிச் செம்மொழியாகிய நமது அருமைத் தமிழிலோ உலகப் பேரறிஞர்கள் பலரும் ஒருங்கு பாராட்டும் அரிய நூற்செல்வங்கள் உள்ளன. அவை அனைத்தையும், அவற்றை இயற்றிய அறிஞர் பெருமக்களின் வரலாற்றையும் மேலைநாட்டு முறையில் சிறந்த வேலைப்பாட்டுடன் கூடிய தோற்றப் பொலிவுடன் கழகம் வெளியிட்டுள்ளது அன்றியும் அரிய நூல்கள் பலவற்றை, அவை எளிதில் விற்பனையாகா என்று தெரிந்தும் வணிக நோக்கமின்றித் தமிழ்ப்பணியே கருதிக் கழகம் வெளியிட்டுள்ளது. மறைந்துவரும் அரிய சிற்றிலக்கியங்கள் பலவற்றைப் பாதுகாக்கும் நோக்குடன் அண்மையில் ''சிற்றிலக்கியப் பாது

காப்புத் திட்டம்"* எனும் ஒரு திட்டத்தைக் கழகம் வகுத்துள்ளது. அத் திட்டத்தின்வழிப் பெரும்புலவர் சோழவந்தான் அரசஞ் சண்முகனர் அவர்கள் இயற்றிய அரிய நூலான 'மதுரை மீனுட்சியம்மை சந்தத் திருவடிமாலை' என்னும் அருள்நூல் முதலாவதாக வெளிருகின்றது. இனித் தொடர்ந்து பல நூல்கள் வெளிவர விருக்கின்றன.

ஓரளவேனும் இன்று தமிழ்நாட்டில் நிலவிவரும் தமிழ் எழுச்சியுணர்விலும் ஆக்கச் செயல்களிலும் ஆசிரியர் தவத்திரு மறைமலையடிகளாரின் செம்மை சான்ற அரும் பணிகளும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பெரும் பணிகளும் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெறுவன என்பது யாவரும் ஒப்புக் கொள்ளும் உண்மையாகும். இத்துணை இருந்தும் கடந்த சில ஆண்டுகளாகக் கழகத்தின் பொருள்நிலை மிகவும் வருந்தத் தக்கதாக இருக்கின்றது.

புத்தக விற்பனை குறைந்து வருகின்றது.

பணியாளர்களுக்குக் கணிசமான சம்பளம் கொடுக்க இயலா நிலையிலும் விருப்பூதியமும் கொடுத்தல் கடப்பாடாக உள்ளது.

பொருள் விலை யேற்றத்தாலும், குறைந்த அளவு படிகளே அச்சிட வேண்டி யிருத்தலாலும் புத்தகங்களின் உருவாக்கச் செலவு மிகுதியாகின்றது. ஆனல், அந்த அளவுக்கு விலையை ஏற்ற முடியவில்லை.

பள்ளிப் பாட நூல்களை அரசே அச்சிடுவதனல் கழகத்திற்கு அவ்வகையில் வந்த வருவாய் குறைந்து விட்டது.

நூல் நிலையங்கள் நூல்களின் தரமறிந்து வாங்குவதில்லை.

அரிய நூல்களை வெளியிடுவதற்கேற்ப அரசு தக்க உதவியும் செய்வதில்லை.

கழகம் சிறப்புற நடத்திவரும் 'சென்னை மறைமலையடிகள் நூல் நிலையம்', நெல்லைச் 'சிவஞான முனிவர் நூல் நிலையம்', 'பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்ற நூல் நிலையம்' ஆகிய

* சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்டம் பற்றிய நெறி முறைகளைச் செல்வி சிலம்பு : 52, பரல் : 3இல் கண்டுகொள்க! தனியே வேண்டுவோர் எழுதி அஞ்சலிற் பெற்றுக் கொள்ளலாம். கழக விற்பனை நிலையத்திலும் கிளைகளிலும் கிடைக்கும்.

வற்றுக்கும், மறைமலையடிகள் கலை மன்றம் முதலியவற்றுக்கும் அரசின் கணிசமான பொருளுதவி கிட்டவில்லை.

பாலுணர்ச்சி முதலியவற்றைக் கீழ்த்தரமான முறையில் விளக்கும் கதை நூல்களையும், புறக்கவர்ச்சி இதழ்களையும் நூறுயிரக் கணக்கில் அச்சிட்டு, அவற்றைச் சில திங்களிலேயே விற்றுத் தீர்த்து, மக்கள் உணர்வைக் கெடுத்து, அவர்கள் முன்னேற வொட்டாமல் தடுத்துத் தாம் ஊதியம் தேடிக் கொள்ளும் நூற்பதிப்புக் கூடங்கள் பெருகிக்கொண்டிருக் கின்றன. ஊதியத்தைத் தவிர இவற்றுக்கு வேறு சிறப்பான கொள்கைகள் ஏதும் இல்லை. கழகம் போன்று சட்ட திட்டக் கட்டுப்பாடுகளும் அவற்றுக்கு இல்லை.

நூல்நிலையங்களின் பெரும்பகுதி இடத்தை இவற்றின் வெளியீடுகளே அடைத்துக் கொள்ளுகின்றன.

பல்கலைக் கழகங்கள் மேல்நிலை வகுப்புகட்குக்கூடக் கழக வெளியீடுகளான அரிய தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பாட மாக வைப்பதைக் குறைத்துப் புதுமை என்ற பெயரில் தரமற்ற கதைப் புத்தகங்கள் முதலியவற்றைப் பாடமாக நிறைத்து வரு கின்றன.

கல்வி நிறுவனங்களில் பதவிகளில் இருப்போர் ஆராய்ச்சி யற்ற எளிய நூல்களையுங்கூடத் தாமே எழுதி அச்சிட்டுச் சாய் காலைப் பயன்படுத்தி அவற்றைப் பாடமாக வைத்து அதன் வழி ஊதியந் தேட முனைகின்றனர்.

மற்றுஞ் சிலரோ பாடநூல் உரை வினுவிடை நூல்கள் எழுதி வெளியிட்டுக் கல்வித் தரத்தையும் மாணவர்களையும் பாழ்படுத்தி எளிய முயற்சிகளில் பெரும் பொருள் திரட்ட முந்து கின்றனர். ஆசிரியர்களும் மாணவர்களும் அவற்றையே கைக் கொண்டு உழைப்பின்றிச் சம்பளம் வாங்கவும், அறிவாழமின்றிச் சான்றிதழ்கள் பட்டங்கள் பெறவும் அங்காந்து நிற்கின்றனர்.

சமயத்தையும் தமிழையும் வளர்க்கும் பொருட்டுப் பொது மக்கள் பணத்தைக் கோடி கோடியாகத் தொகுத்து வைத்துக் கொண்டிருக்கும் திருமடத்துத் தலைவர்களோ புறச் சடங்குகளி லும் நிலபுலங்கள் மாடு மனைகள் பற்றிய கணக்கு வழக்கு களிலுமே பொருளையும் பொழுதையும் செலவிட்டுக் கொண்டிருக் கின்றனரே யல்லாது சமயவளர்ச்சி தமிழ் வளர்ச்சிகளில் அக் கறை கொள்வதில்லை. அவற்றுக்கு அவர்கட்கு நேரமும் இல்லை.

ஆகவே கழகத்தின் சமயப்பணி தமிழ்ப் பணிகளை உணர்ந்து உதவ வேண்டும் என்ற எண்ணம் ஏற்படவும் வாய்ப்பில்லை.

அறப்பணி யமைப்பு (Trust) என்னும் பெயரில் பெரும் பொருளை ஒதுக்குகின்ற மாபெரும் தொழில் நிறுவனங்கள் அத் தொகையில் ஒரு பகுதியைச் சமய நூல் வெளியீட்டிற்கும் தமிழ் வளர்ச்சிக்கும் பயன்படுத்த முன் வருவதில்லை.

தமிழினத்தை எழுச்சியுறச் செய்து 'மாநிலத்தில் மக்கள் உள்ளவரை மறையாப் புகழ்பெற்ற நிறைபுல வேந்தர்' மறைமலையடிகளாரின் நூல்கள் அனைத்தும் இடம்பெறாத நூல் நிலையங்கள் இருக்கலாமா? தமிழறிஞர் பெருமக்கள் வீடுகளிலெல்லாம் அடிகளாரின் நூல்கள் விளங்க வேண்டாவா? ஆயிரம் படிகள் செலவாகப் பத்தாண்டுகட்குமேல் ஆகின்றனவே! அடிகளார் வாழ்ந்த காலத்து அவர்களே மனம் வருந்திக் குறிப்பிட்டுள்ளார்கள். அந் நிலையே இத்தனை யாண்டுகட்குப் பின்னரும் நீடிக்கின்றது.

பல்கலைக் கழகங்கள் அடிகளாரின் நூல்களைப் பாடமாக வைத்து மாணாக்கர்க்குத் தமிழுணர்வை ஊட்ட மனங்கொள்வதில்லையே. தமிழின விழிப்பிற்குப் பள்ளியெழுச்சி பாடிய பேராசிரியர் சுந்தரனாரின் மனோன்மணீயங் கூடப் பாடநூலாக வைப்பது கைவிடப்பட்டு வருகின்றது.

வீட்டு நூலகத் திட்டமும், பள்ளிக்கூடங்களில் வகுப்பு நூலகத் திட்டமும் செயல்படவில்லை. திருக்கோயில்களில் நூலகங்கள் அமையவில்லை. பெயரளவிலேயே சில கோயில்களில் இருக்கின்றன.

திருமணம் முதலிய விழாக்களிலும், கூட்டங்கள் மாநாடுகள் முதலியவற்றிலும் சீர்வரிசையாகவும், அன்பளிப்பாகவும் தட்டு முட்டுப் பொருள்களையும் பிறவற்றையும் வழங்குவோர் சிறந்த அறிவு நூல்களை வழங்கும் மனப்பான்மை வளரவில்லை.

யானைகள் முதலிய காட்டுவிலங்குகளும் பிறவும் சண்டையிட்டுக்கொள்வது போலவும், ஆடை குலைந்த மகளிர் ஆடவர் தோற்றங்கள் போலவும், பிறவாறும் மண்ணாலும், மரத்தாலும், மாழைகளாலும் செய்யப்பட்ட வடிவங்களை ஆயிரக் கணக்கான தொகை கொடுத்து விலைக்கு வாங்கித் தம் இல்லங்களில் அழகுப் பொருள்களாக வைக்கின்ற செல்வர்கட்கு அரிய தமிழ் இலக்கியக் கருவூலங்களான சங்க இலக்கியப் பேழை, தமிழர் சமய இலக்கியப் பேழை, பிற்கால இலக்கண இலக்கியப் பேழை

முதலியவற்றை வாங்கித் தம் இல்லங்களில் அறிவும் அழகும் விளங்குமாறு வைக்கவேண்டும் என்ற ஆர்வம் எழவில்லையே !

இந் நிலையில் கழகம் பொருளை முடக்கிப் புத்தகங்களாக உருவாக்கி வைத்துக்கொண்டும், இடவாடகை, பாதுகாப்புச் செலவு முதலியவற்றை மேலும் மேலும் பெருக்கிக்கொண்டும் அல்லலுற நேர்ந்துள்ளது.

அண்ணல் திருவரங்கனர் அவர்களின் அருமுயற்சியினால் தோன்றிய கழகத்தை. அப் பெருமகனர் ஆளுமையின் கீழிருந்த 24 ஆண்டுக் காலத்திலும் அவருக்கு உறுதுணையாக நின்று உழைத்தும், அவர்தம் மறைவிற்குப்பின் கழக ஆட்சிப் பொறுப்பை ஏற்று 34 ஆண்டுகளாக ஓவாத முயற்சிகளை மேற்கொண்டும், ஐம்பத்தெட்டாண்டுக் கால அயரா உழைப்பால் பற்பல கிளைகளுடனும் அறப்பணி அமைப்புக்களுடனும் கூடிய மாபெரும் நிறுவனமாக வளர்த்துத் தழையச் செய்து, எண்பதாம் அகவையில் நடையிடும் முதுமை எய்தினும், இளமையுணர்வுடன் இன்றும் கழகப்பணிகளில் கண்ணுங் கருத்துமாக ஈடுபட்டுவரும் கழக ஆட்சியாளர் திருநெறிய தமிழ்ச்செல்வர் வ. சுப்பையா அவர்கட்கு மேற்கூறியாங்கு வழிதவறிச் செல்லும் நாட்டு நிலையும், வலிவு குன்றியுள்ள கழக நிலையும் எத்துணை வருத்தந்தரும் என்பதை எண்ணிப் பாருமின் !

கழகம் ஒன்றே அரிய தமிழ் இலக்கண இலக்கியங்களின் நிலைக்களனாக விளங்குகிறது என்பதையும், கழகம் நீடினிது செம்மையாக நடைபெறுவது நல்ல தமிழ் வளர வாய்ப்பாகும் என்பதையும் நம் தமிழ்ப் பெருமக்கள், குறிப்பாகத் தமிழறிஞர்கள் பெரும்பாலும் தெளிவாக விளங்கிக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ‘கழகம் தோன்றியிராவிடின்.........?’ என்றொரு வினா எழுப்பிக்கொண்டு கடந்த அரை நூற்றாண்டுக்கு முந்திய தமிழ்மொழி தமிழ்நாட்டு நிலைகளை எண்ணிப் பார்க்குமாறு வேண்டுகின்றோம்.

கழகப் பணியின் இன்றியமையாமையை யுணர்ந்து தமிழ்ப் பெருமக்கள் அனைவரும் கழகவெளியீடுகளை வாங்கியும், செந்தமிழ்ச் செல்வி வாழ்நாள் உறுப்பினராகியும், சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்டத்தில் உறுப்பினராகியும், ஆராய்ச்சியாளர்கட்குப் பெரும்பயன் தந்துவரும் மறைமலையடிகள் நூல் நிலையத்திற்குப் பொருளுதவி நல்குவதோடு அரிய நூல்களையும் பழைய, இதழ்களையும், விழா மலர்களையும் தொகுத்துக் கொடுத்துச் சிறப்புறுவார்களாக!

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௰௨, பரல் ௫, பக்கம் ௨௨௨-இன் தொடர்ச்சி)

கடவுள் அருவமாய் இருக்கும்போது இறைவனியல்பும் அம்மையியல்பும் பொருளும் அதன் குணமும் போல ஒரு வகையில் குணி குணமாய்த் தோற்றுகிறது. இது ஒரு புடை ஒப்புமை; முற்றுவமை யன்று; தனக்கு இயல்பாக உள்ள கருணை யினால் அடியார்களை உய்விக்கும் பொருட்டு இறைவன் உருக் கொள்கிறான். உருவமென்பது; 'அருவம்' 'அருவுருவம்' 'உருவம்' ஆய மூன்றையும் உணர்த்தும். அப்படி உருவெடுக்கும் நிலையில் கடவுள் அருளுருவமாய், முதலில் அருவமாகி அதன் பின் அருவுருவமாய்த் தோற்றங் கொள்வான்; அங்ஙனம் தோன்றும்போது, இவ்விரண்டும் தனித்தனி முதல்களாகத் தோற்றாமல் சோதி போல் ஓரளவு பிரிந்து நிற்கிறது. பிரிந்து ஒரு பொருள்போல் இருக்கும் அருவுருவமே கோயிற் கருவறை களில் 'இலிங்க'மாய் உள்ளது. அவை மீண்டும் உருவ நிலையில் வரும்போது அம்மையும் அப்பனுமாய்த் தனித்தனியாய்ப் பிரிந்து ஒருவரை யொருவர் ஈர்த்துக்கொண்டு காதலாய் நிற்கின்றனர். இதனைச் சேக்கிழார் பெருமான் "கற்பனை கடந்த சோதி, கருணையே உருவமாகி அற்புதக் கோலம் நீடி" என்பர். கடவுள் கற்பனை கடந்தவர். அடியார்க்காகக் கருணையினால் உருவங் கொள்ளும் நிலையில், பொதுவாக ஓர் அருவமாகிப் பின்பு அருவுருவமான ஒளி வடிவானான்; அதன்பின் இருவராக உருவ மானான்; அது, 'அற்புதக் கோல'மாய் இருக்கிறது. "தன்னின் வேறின்றியும் வேறாகிய தாதான்மிய சத்தி" என்று இதனைச் சிவஞான முனிவர் பேருரையிற் கூறுவர். ஆதலால் கற்பனை கடந்த நிலையில் உள்ளபோதே அம்மை யப்பர் (முதல்வனும் அம்மையுமாய்த்) தம்முள் 'ஒற்றுமையில் வேற்றுமையாய்' இருப்பர்!

6ஆம் நூற்பா:

ஆறும் நூற்பா, கடவுள் இலக்கணம் உணர்த்துவது. முதல் நூற்பாவில் கட்வுளின் தொழில் உணர்த்தப்படுவதனால் கடவுளின் பொது இயல்பு தொழில் நிலை தெரிந்தது. இங்கே கூறுவது கடவுளின் சிறப்பியல்பு 'சித்துச் சத்து' என்னும் இயற்கை நிலை.

'கடவுள்' 'உயிர்' 'உலகம்' என்னும் முப்பொருள்களும் தொன்மைப் பொருள்கள்; ஆனாலும் இவற்றிற் கடவுள் ஒருவரே தக்க உள்பொருள் (சத்து); அதனால் அவர் 'சிவ சத்து' எனப்

படுவார். அவர்க்கு முன், மற்றவையெல்லாம் உள்பொருள்களா யிருந்தும், அல்லாதன (அசத்து) போல விளக்கமில்லாமல் இருக்கும். முப்பொருள்களிலும், நன்ருய் விளங்குவது 'சிவ சத்து.'

இங்ஙனம் சத்தும் அசத்தும் வரையறை செய்து தெரிவித்தலை ஆரும் நூற்பா மேற்கொண்டது.

நூற்பா :

"உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்,
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்கும் மன் உலகே"

என்பது நூற்பா.

பொருள் :

உணர் உரு அசத்து எனின்—உயிரின் அறிவினுல் அளவைகள் கொண்டு ஆராய்ந்து அறியப்படுவது அசத்துப் பொருள் என்று சொல்லப்படுவதனுலும்; உணராது இன்மையின்—உயிரினுல் அப்படி அறிய வாராதது இல்லாப் பொருள் (பாழ்) என்று பெறப்படுதலாலும்; இரு திறன் அல்லது—'அசத்து' 'பாழ்' என்னும் இந்த இரண்டு வகையும் அல்லாமல்; சிவசத்து ஆம் என—சித்தும் சத்தும் எனச் 'சிவ சத்து' ஆகும் என்று; இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே—'அறிவுப் பொருள்' (சித்து) 'உள்பொருள்' (சத்து) என்று இந்த இரண்டு வகையாலும் நிலைபெற்ற உணர்வினர், சொல்லுவர்.

விளக்கம் :

நூற்பா அமைந்தபடியே இவ்வாறு பொருள் செய்வதாலும் கருத்து மாருது. மன் உலகு—நிலைபெற்ற உலகினர்; மெய்யுணர்வினர்! 'உலகே' என்றமையால், 'உலகெலாம்' எனப் பொருள் கொள்ளப்படும். இந்த ஏகாரம் அழுத்தத்தில் (தேற்றத்தில்) வந்தது. சத்துப் பொருள், சித்துப் பொருளும் ஆம். சிவம்—சித்து; சிவ சத்து—சித்துச் சத்து.

அறியப்படாமை என்றது, அளவைகள் கொண்டு ஆண்டவனை அளந்து ஆராய முடியாமை; கடவுள், உயிர்களால் எவ்வாற்ருலும் உணரப்படாததும் அன்று; மெய்யுணர்வு பெற்று விட்டால், அதனுல் உணர முடியும். 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' என்ருர் மணிவாசகனுர்.

பலப்பல ஆலைகளை உடைய ஒரு தொழிற்சாலையைப் பார்க்க வேண்டுமென்ருல், நம் முயற்சியினுல் நாமே பார்த்தால் ஓரளவுதான் அறிய முடியும். ஆனுல், அத் தொழிற் சாலை

யின் தலைவர் துணையுடன் சுற்றிப் பார்த்தால், பேரளவு அறிந்து கொள்ளலாம். அப்போதும் அத் தலைவரைப் போல் முற்றும் அறிய இயலாது. அது போலத்தான் கடவுள் இயல்பு முழுவதையும் உயிர்களால் அறிய இயலாது. அவன் அருள் என்னும் பதிஞானத் துணை கொண்டால் பேரளவாவது அறியலாம். நாமே நம் முயற்சியினால் பார்ப்பதானால் அவ்வளவு கூட அறிய முடியாது.

இவ்வாறு நம் முயற்சியாகிய தேனிப்பால் அறிய முடியாமையோடு, கல்வி யறிவாலும் செல்வ வளத்தாலுங்கூட எல்லாம் வல்ல இறைவனை அறிவதென்பது இயலாது; இவையிரண்டும் 'பசு ஞான'மும் 'பாச ஞானமு'மாகும். பதிஞானத்தால் மட்டும் ஒருவாறு உணர முடியும். இக் கருத்தை, அயனாலும் மாலாலும் காண முடியவில்லை என்று சொல்லுவதுண்டு. அவ்விருவருக்கும் இடையில் கடவுள் 'சோதி'யாய் எழுந்தருளினான். அதனைக் கூட இன்னதென்று அவர்கள் அறிந்துகொள்ள முடியவில்லை. காரணம் அவன் அருளாலே அவன்தாள் பணியாமல் தம் முயற்சியினாலும் தம் அறிவினாலும் அவர்கள் அறிய முற்பட்டனர்.

"தாமரை மேல் அயனும் அரியும், தமது ஆள்வினையால் தேடிக்
காமனை விடுவித்தான் கழல் காண்பிலராய் அகன்றார்"

என்று திருஞான சம்பந்தரும் திருப்பாதாளீச்சுரப் பதிகத்தில் கூறுவார்.

இவ் வகையில் அறியப்படாதவன் இறைவன்; ஆனால், அவன் எவ்வாற்றாலும் அறியப்படாதவன் அல்லன். அப்படிச் சிறிதும் அறியப்படாத பொருள் எங்கும் இல்லை. பசு பாச ஞானங்களுக்கு எட்டாத சிவன், பதிஞானத்துக்கு உள்பொருளாய்த் தோன்றுதலால், அவன் சத்தாய்த் தெரிகின்றான்.

சத்துப் பொருள்களில், உலகம் என்னும் அறியாப் பொருளும் (சடமும்) உண்டு. அது 'சட சத்து' எனப்படும்; அந்தச் சடசத்து கடவுள் சத்தன்று என்ப. கடவுளைக் குறித்துச் 'சிவ சத்' தென்பது வந்தது; இது சித்துச் சத்து; ஞானச் சத்து; சித்தாதலும் சத்தாதலும் இறைவனுக்குச் சிறப்பிலக்கணம் (சொரூப இலக்கணம்); அதனாலே தான் இக் கடவுளிலக்கண நூற்பா, சிவஞான போதத்தின் நுகர்வுப் பகுதியை (உண்மைப் பகுதியைச்) சார்ந்து நின்றது. அல்லாவிட்டால், முதல் மூன்று நூற்பா, கடவுள் உலகு உயிர் என்பவற்றின் உண்மை கூறியது போல், அடுத்த மூன்று நூற்பாக்களும் முறையே கடவுள் இலக்கணம் உலகின் இலக்கணம் உயிரின்

இலக்கணம் முதலியன கூறியிருக்கும்; சிவஞான போதத்தின் உண்மைப் பகுதி முழுதும் கடவுள் இயல்பிலேயே உயிர் தோய் வதாய் இருப்பதனால், அதனைச் சார இந் நூற்பா எதிர் நிரனிறையாக வந்தது.

'பாச ஞானம்' என்பது பொதுவாக 'உலக அறிவு' எனப் படும். ஆணவமும் மாயைக் கருவிகளும் இரு வினைகளும் பற்றிய அறிவைப் 'பாச ஞானம்' என்றே கூறுவர். மாயைக் கருவிகளில் ஒன்று 'நாதம்'; அதனோடு கூடியது வாக்கு; வாக்கு என்பவை மறைகளும் நூல்களும்; இவையெல்லாங்கூட அதனால் 'பாச ஞானம்' என்றே சொல்லப்படும்.

'பசு ஞானம்' என்பது ஆன்மாவைப் பற்றியது. உயிர், தன்னை உணர்ந்தாலும், உயிரைப் பற்றியதே யாதலால், 'பசு ஞானமே'; 'நான் பிரமம்' என்று தலைவனை உணர்ந்ததாக வந் தாலும், உயிர் முனைப்பே தெரிவதனால் அதுவும் 'பசு ஞானமே'; "ஆன்மாவின் உண்மை உணர்ந்தவர், தமை உணர்ந்தோர், தரும் இது பசு ஞானம்'' எனச் சித்தியார் கூறும்.

'பசு ஞானம்' 'பாச ஞானம்' எனப்படும் இந்த இருவகை ஞானத்தாலும், முப்பொருள்களையும் அறிவனவாய் ஓரளவு ஆராய்ந்து கொள்ளமட்டுமே இயலும்; கடவுளைப் பற்றியும் இவற்றால் ஆராயலாம். அந் நிலையிற் கடவுளின் தொழில் தொடர்பான பொது இயல்புதான் தெரியும். 'பதி ஞானத்'தால் கடவுளை நுகரும் போதுதான் கடவுளின் உண்மைகளாகிய சிறப் பியல்புகளைப் பேரளவு உணர முடியும். வீடுபேற்றிற்கூட கடவுள் இயல்புகளை உயிர்களால் முற்றும் அறிந்துகொள்ள முடியாது. அத்தகைய பேராற்றற் பெரியோனே 'சிவ சத்து' என்பவன்.

'அசத்து' என்பதைச் சிலர் 'சத்து' என்பதன் மறுதலை யாகிய இன்மைப் பொருள் என்று கருதிவிடுவர்; அவர் 'நையா யிகர்' முதலியோர். 'சுத்தம்' 'அசுத்தம்' என்பவை மறுதலைப் பொருளில் வருவது போலவே 'சத்தும்' 'அசத்தும்' வருகின்றன என்பது அவர்கள் கருத்து.

'சத்து' என்னும் உள்பொருள் மிக்க விளக்கம் உடைய தென்றும் அதற்குமுன் 'அசத்து' என்னும் உள்பொருள் அவ்வளவு விளக்கமில்லாதது என்றுந்தாம் இங்கே கொள்ளப் பட்டன.

இந் நூற்பா, 'உணர் உரு அசத்தெனின் உணரா தின்மையின்' எனவும், 'இரு திறனல்லது சிவசத்தாமென

இரண்டு வகையின் இசைக்கும்மன் னுலகே' எனவும் இரண்டு பிரிவுகள் உடையது.

முதல் பிரிவு:

இது, 'அசத்தின்' இயல்பை வரையறுப்பது; அதாவது, உயிரின் அறிவினுல் அறியப்படும் சுட்டுப் பொருள்கள் எல்லாம் 'அசத்து' என்று அதன் உண்மையை இப் பிரிவு கூறியது. இப் பிரிவின் மேற்கோளாக ஆசிரியர் இவ்வாறே குறித்தார்.

உயிரின் அறிவினுல் எவ் வகையாலும் உணரப்படாத பொருள் என்பதே இல்லை. விஞ்ஞானிகள் உலகு முழுவதையும் ஆராய்கின்றனர். எவ்வளவு நுட்பப் பொருள்களாய் இருந்தாலும் அவையெல்லாம் வரையறையுடைய தூலப் பொருள்களே! அதனுல் அவர்கள் அறிவுக்கு எட்டக்கூடாதது இல்லை. அப்படி அறிவினுல் அறியப்படும் உள்பொருள்கள் ஒரு வரம்புக்கு உட்பட்டனவாய் அதனுல் சுட்டி அறியத்தக்க சுட்டுப் பொருள்களாய் இருப்பதனுல் அப்படிப்பட்டவற்றை 'அசத்து' என்று சொல்லி விடலாம்.

'அசத்து' என்பதற்கு மற்ருெரு பொருள்தான் விளக்கமில்லாமை என்பது. அவை உள்பொருள்களாக இருந்தாலும் மிக்க விளக்கமாய் இல்லாமை; ஒவ்வொரு பொருளுக்கும் விளக்கம் உண்டு; நிறம் உண்டு. ஆனுல், பெரிய விளக்கத்தின் முன் சிறிய விளக்கம் எடுபடுவதில்லை. அதனுலேயே அவை உள்பொருளாய் இருந்தும் (சத்தாய் இருந்தும்), பகலில் ஞாயிற்றுக்குமுன் விண்மீன்கள் தெரியாமை போலத் தெரியாதவை (அசத்து) யாகின்றன.

அதனுலேயே, 'அறிவினுல் அறியப்பட்ட சுட்டு அசத்து' என்னும் மேற்கோளுக்குப் 'பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்' என்று ஆசிரியர் ஒரு காரணமும் கூறிக்கொண்டார்.

இன்னெரு கருத்தும் இங்கே நினைவிற்கொள்ளவேண்டும்; தூலப் பொருள்களெல்லாம் அவை எவ்வளவுதாம் நுட்பமானவையானுலும் ஒரு வரம்பும் வடிவமும் உடையன. வரம்புடையனவெல்லாம் வடிவு நிலைமாறுதற்குரிய தூலப் பொருள்களே; வடிவுநிலை மாறிவிட்டால் தூலநிலை அழிந்து, அடிப்படை நுட்ப நிலையாய் விடும். உலகப் பொருள்களெல்லாம் தம் தூல நிலை மாறி நுட்ப நிலையாகிய 'மாயை'யில் ஒன்றிவிடும்போது, 'மாயை' உள்பொருளாய் இருந்தாலும், அதன் இருப்புத் தெரி

வதில்லை; உன்னிக்க மட்டும் முடிகிறது; ஆகையால் அதுதானும் 'அசத்து' எனப்படும்.

நிலைமாறிப்போகும் அழியும் பொருள்களெல்லாமும், அவை நுண் பொருள்களாய் மாறி உள்பொருளாய் ஒடுங்கினும், அவையெல்லாமும் 'அசத்து' என்றே கொள்ளப்படுகின்றன. பெரும்பாலும் அவை அறியாமைப் பொருள்களாயிருத்தலால், அசித்துப் பொருள்களுமாகும்.

உயிர் அசத்துப் பொருள்களைச் சுட்டி அறியக்கூடும். அதாவது, குறித்து அறியக்கூடும். அளவைகளால் அளந்தும் அறியக்கூடும்; அறிவில்லாமையால் எங்கும் அவை ஓடிவிட மாட்டா; அதனால் விஞ்ஞானிகள் சோதனைகள் செய்து 'அசத்துப் பொருள்களை' அறிந்துகொள்கிறார்கள். அவ்வா றெல்லாம் சோதனைக்கு அகப்படாதவன் கடவுள். 'சோதிக்க வேண்டாம் சுடர் விட்டுளன் எங்கள் மூர்த்தி' என்று திருப்பா சுரத்திலும், "அறிவு அறிவரியவன்" என்று திருச்சிவபுரப் பதிகத்திலும், அருளுவார் திருஞானசம்பந்தர்.

'நையாயிகர்' முதலிய சிலர், 'முதல்வனும் அளவைகளால் அளந்து அறியும் பொருளே' என்பர். 'சாங்கியர்', எல்லாப் பொருள்களும் 'சத்தே' என்றனர். அவர்க்கு எண்ணம், எல்லாப் பொருளும் உள்பொருள்களாயிருக்கும்போது, சில வற்றை மட்டும் 'அசத்து' என்று ஏன் சொல்லவேண்டும் என்பது.

முப்பொருள்களும் உள்பொருளாய் இருந்தாலும், 'சிவ சத்து' என்னும் கடவுள், மற்றச் 'சட சத்துக்கள்' போன்றவை யாகாமல் பேராற்றலும் பெரு விளக்கமும் உடையதென்று அவர்கள் எண்ணுவதில்லை. அத்தகைய கடவுளுக்கு முன் (சிவத்துக்கு முன்), உலகங்கள் 'அசத்துப்' பொருள்களாய் உள்ளன; உயிர்கள் ஒரு நிலையில் 'அசத்'தாயிருந்தாலும் 'சிவ சத்'தாகிய 'சத்'தோடு ஒன்றி உயர்வதனால் சத்துமாய் எண்ணப் பட்டுச் 'சதசத்து' எனப்படுகின்றன; 'சதசத்' என்னும் உயிர்கள் அறிவோடும் இருப்பதனால் அவற்றைச் 'சிதசித்து' என்பதும் உண்டு. இங்ஙனம் 'கடவுள்' 'உலகம்' 'உயிர்' என்னும் முப் பொருள்களும் உள்பொருள்களேயாயினும், முறையே அவை 'சிவ சத்து' 'சதசத்து' 'சட சத்து' என்று தத்தமக்குரிய விளக்க வேறுபாடுகள் காரணமாகச் சொல்லப்படும்.

உயிரின் அறிவு, கடவுளின் அறிவுபோல எல்லாம் ஒருங்கே அறியக் கூடியதன்று; ஒவ்வொரு நேரத்தில் உயிரின் அறிவு

ஒவ்வொரு வகையாக எண்ணும்; காரணம், அறிவை விளக்க உதவும் மாயைக் கருவிகளால் பலவேறு வகையாக அது கலப் புண்டிருத்தலே; மாயைக் கருவிகளுள் ஒன்று, மூலப்பகுதி; அதன் பிரிவுகள் முக்குணம்; 'தாமசம்' என்னும் மயக்க குணம் உயிரில் மேம்பட்டிருக்கும்போது உயிரின் நிலை, அறிவு நிலையா யிருக்கிறது; 'உலக அறிவு' என்பது பெரும்பாலும் அத்தகைய மயக்க அறிவு நிலையே. 'இராசசம்' என்னும் ஆதிக்க குணம் மேம்பட்டிருக்கும்போது உயிரின் நிலை உணர்வு நிலையாகும்; பெரும்பாலும் அது 'யான்' 'எனது' என்னும் செருக்குணர்வு நிலை. 'சாத்துவிகம்' என்னும் சாந்தம் மேற்பட்டிருக்கும் போதுதான் 'பதிஞானம்' என்னும் மெய்யுணர்வு நிலை சற்றுத் தலைப்படத் தொடங்குகின்றது; பெரும்பாலும் இது 'மோன நிலை' என்றும், அன்பே சிவமாகும் அருளுணர்வு நிலை என்றும், கூறப் படும். முக்குணங்கள் மாயையின் காரியமாதலால், இறைவனை இவை சேர்வதில்லை; அதனால் அவன் 'நிர்க் குணன்' எனப் பட்டான்.

உயிர்கள் சிவசத்தைச் சாரும்போது இந்த அருளுணர்வு நிலையை அடைகின்றன; உலகைச் சாரும்போது அறிவு நிலையை அடைகின்றன. இப்படி 'அசத்'தோடும் 'சத்'தோடும் சார்ந்து அவற்றின் வண்ணமாய் ஆவதனால், உயிர்கள், "சதசத்து" (சத் அசத்து) எனப்பட்டன; உணர்வு மிகுந்து சிவசத்தோடு சார்வதனால் 'சிதசித்து' (சித் அசித்து) எனவுங் கூறப்பட்டன.

சிவத்தோடு சேரும் பேருணர்வுநிலைக்கு உயராமல், அசத்துப் பொருளைச் சேரும் அறிவு நிலையில் உயிர்கள் மயங்கு வதாய் இருப்பதனால், இந் நிலையில் அறிவினால் அறியப்பட்ட சுட்டு 'அசத்து' என்று ஆசிரியர் விளக்கினார். சுட்டுப் பொருள் களைத்தாம் உயிரின் அறிவு அறியும். ஆதலால், 'அறிவினால் அறியப்பட்ட சுட்டு' எனப்பட்டது.

'அசத்'தின் இயல்பை விளக்குவதற்கு ஓர் எடுத்துக்காட்டுச் செய்யுள் வருகின்றது. அதில் ஒரு பாதி, 'அசத்தி'ன் இயல் பையும் மற்றொரு பாதி அதற்கு எடுத்துக்காட்டுக்களையும் எடுத்து விளக்கும்.

"அசத்தறியாய் கேள்நீ, அறிவறிந்த எல்லாம்
அசத்தாகும் மெய்கண்டான் ஆயின்—அசத்தலாய்!
நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரின் அவை யின்றாமா றெப்பு."

பொருள் :

அசத்தறியாய்—அசத்தின் இயல்பறியாதோனே; கேள் நீ—நீ கேட்பாயாக; மெய்கண்டான் ஆயின்—உண்மையைக் கருதுவோன் ஆராய்ந்து பார்த்தால்; அறிவறிந்த எல்லாம் அசத்தாகும்—அறிவு நிலையால் அறியப்பட்ட எல்லாப் பொருள்களும் அசத்து எனப்படும்.

அசத்து அலாய்—'அசத்து' எனப்படாத 'சத்' காரியவாதியாய் இருப்பவனே! ஓரின்—எண்ணிப் பார்க்குமிடத்து; அவை இன்ருமாறு—அவ்வசத்துப் பொருள்கள் வடிவு இல்லாமல் மறைந்து விடுவதற்கு; ஒப்பு—உவமைப் பொருள்கள்; நீரில் எழுத்தும் நிகழ் கனவும் பேய்த் தேரும்—நிகழ்கின்ற நீர்மேல் எழுத்தும் கனவுக் காட்சியும் கானல் நீருமாம்.

'அறிவறிந்த எல்லாம் அசத்'தாகும் என்று இங்கே வந்தபடி, 'அறிவினல் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி' என்று சார்பு நூலாகிய சிவப்பிரகாசத்திலும் வந்தது. கடவுளும் அசத்தே என்னும் 'நையாயிகர்' போன்ருரை இது மறுத்தது.

வெண்பாவின் பின்வரிகள் அதற்கு உவமை கூறின. 'நீர் மேல் எழுத்து', எழுதி முடியுமுன்பே மிகுவிரைவில் அழிந்து வருகின்றது; 'கனவுக் காட்சி', முற்றும் முடியு முன்பே இடையே மறைந்து போகிறது; 'கானல் நீர்' வெயிலின் வெப்பம் தணியும் வரையில் இருந்து கடைசியில் மறைந்துவிடுகிறது. இவை இவற்றுக்குள் வேறுபாடு. பொதுவாக மூன்றும் மறைந்து விளங்காத நிலையை எய்துகின்றன. அசத்துப் பொருள்களின் விளக்கம் தோன்ருமை இங்ஙனமெல்லாம் வேறுபட்டிருத்தலை இவ்வுவமைகள் புலப்படுத்துகின்றன. எல்லாம் ஒரே மாதிரியான சத்துப் பொருள்களே என்னும் சாங்கியரை இவற்ருலும் மறுத்து, வேறுபாடுகளாகிய இவை எடுத்துக்காட்டப்பட்டன.

திரிபின்றி ஒரே நிலையாய் எல்லாம் ஒருங்குணரும் 'சிவசத்'தின் இயல்பு உணர்ந்தோர்க்கே அசத்தின் இயல்பு நன்கு விளங்குமாதலால், 'அசத்தறியாய்' எனவும், 'மெய்கண்டான்' எனவும், ஆசிரியர் கூறினர்; 'ஆயின்' என்பது சத்து அசத்துக்களை ஆராயின் என்னும் பொருட்டு; இயற்கையில் அசத்து ஆகாமல் சத்தில் சார்தற்கு உரியோனே என்பதற்கு 'அசத்தலாய்' எனவும் வந்தது. 'ஓரின்' என்பது, அசத்துப் பொருள்களின் வேறுபாடுகளுக்கேற்றபடி எடுத்துக்காட்டுக்களை எண்ணிப் பார்த்தால் என்பதைக் குறிக்கும்.

(தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

6. காந்து:

காந்துதல்-எரிதல். எரிதல் நெருப்பின் தொழில். சுடுதல், விளங்குதல் ஒளி வீசுதல், சிவத்தல், எரித்தல், எரிவெடுத்தல், உலர்தல், உறைத்தல், சினத்தல் முதலியன எரிதற் கருத்தினின்று கிளைக்குங் கிளைக் கருத்துக்களாம்.

உல்—குல்—குல—குலவு, குலவுதல்=விளங்குதல். ''குலவு கோலத்த கொடி நெடு மாடங்கள்'' (தேவா. 794 : 7)

குல்—கல்—கன்—கனல். கனலுதல் = 1. எரிதல். ''வேமிருந்தையெனக் கனலும்'' (கம்பரா. சூர்ப்ப. 118). 2. கொதித்தல். ''தீப்போற் கனலுமே'' (நாலடி. 291). 3, சுடுதல். ''வயிற்றகங் கனலுஞ் சூலை'' (பெரியபு. திருநா. 62). 4. சினத்தல். ''மாமுனி கனல மேனள்'' (கம்பரா. நீர்விளை. 2). 5. சிவத்தல். ''கண்கனன்று......நோக்குதலும்'' (பு. வெ. 6 : 23).

க. கனல், தெ. கனலு.

கனல்=நெருப்பு. ''உழிதரு காலுங் கனலும்'' (திருவாச. 5 : 8).

ம., க. கனல்.

கன்—கனம்=விளங்கும் பொன். ''கனங்குழாய்'' (கலித். 57).

கனல்—கனலி=1. நெருப்பு. (திவா). 2. கதிரவன். ''வெங்கதிர்க் கனலி'' (புறநா. 41 : 6).

கனன் மரம்=இரவில் ஒளிர்வதாகச் சொல்லப்படும் ஒளி மரம் (சங். அக).

கனனிறக்கல்=மாணிக்கம் (W)., செந்நிற ஒளிக்கல்.

கனல்—கானல்=1. வெப்பம். இங்கே கானலடிக்கிறது. 2. கதிரவன் கதிர். (திவா). 3. ஒளி. ''தேங்கு கானற் கிளிச்சிறை'' (இரகு. நகர. 67). 4. பேய்த்தேர். (திவா).

கன்—கன்று. கன்றுதல்=1. வெயிலாற் கருகுதல். க. கந்து. 2. சினக் குறிப்புக் கொள்ளுதல். (திவா.). 3. மன முருகுதல். "கலையின் பிணை கன்றிடுமென்று" (சீவக. 1188). 4. வருந்துதல் "நெஞ்சு கன்றக் கவிபாடுகிற" (பி. ரு. 3 : 9:6). 5. வாடுதல். "தன்னுடம்பு கன்றுங் கால்" (திரிகடு. 91).

குன்—கும்—கும்மட்டி=நெருப்பு வைக்குஞ் சட்டி. (திவ். திருக்குறுந். 5, வ்யா.). ம. கும்மட்டி.

கும்மாயம்=1. குழைய வெந்தபருப்பு. "பயற்றுத் தன்மை கெடாது கும்மாய மியற்றி" (மணி. 27 : 185). 2. நீற்றின சுண்ணாம்பு. ம. கும்மாயம்.

குமஞ்சம்=நறும்புகைச் சரக்கு. (W).

குமஞ்சான்= ,,

கும்—கும்பு. கும்புதல்=சமைக்கும் உணவு தீய்ந்து போதல். சோறு கும்பிவிட்டது.

கும்பனாற்றம்=தீய்ந்து போன உணவின் வீச்சம்.

கும்பு—கும்பி=1. சுடுசாம்பல். தெ. கும்மு. 2. நரகம். "கும்பி நரகர்கள்" (திவ். திருவாய். 3 : 7 : 8).

கும்பிடு சட்டி=1. கணப்புச் சட்டி. 2. தட்டார் நெருப்பு வைக்குஞ் சட்டி. (W).

தெ. கும்பட்டி, க. கும்பட்டெ.

குல்—குள்—கொள்—கொள்ளி=1. நெருப்பு. "கைக் கொள் கொள்ளியர்" (நெடுநல். 8). 2. கொள்ளிக் கட்டை. "புனவர் கொள்ளியில்" (ஐங்குறு. 295). 3. பொருமையும் முன் சினமு முள்ளவன். 4. கலக மூட்டுபவன். 5. கொள்ளிவைக்கும் மகன் (திருநெல்.).

ம., க. து. கொள்ளி.

கொள்ளாக் கொள்ளி=அடங்காப் பசியன், யானைத் தீயன்.

கொள்ளிக் கண்=தீய கண்.

கொள்ளிக்கால்=1. ஒரு கால் வெளுத்திருக்குங் குதிரைக் குற்றம். "நஞ்சபாதம் கொள்ளிக்கால் வெள்ளிக் கண்" (திருவாத. பு. குதிரையிட். 35). 2. ஆக்கங்கெட்ட (துரதிட்டமுள்ள) கால். அவன் கொள்ளிக்காலன்.

கொள்ளித்தேள்=கடுமையாகக் கொட்டுந் தேள்வகை. "வெங்கொள்ளித் தேள் போன்ற வினை" (அருட்பா, ii, எழுத் தறி. 28).

கொள்ளி வைத்தல்=ஈமக் கட்டையில் எரி மூட்டுதல்.

கொள்—கொளுந்து. கொளுந்துதல்=எரிதல். "தீக் கொளுந்தினவுந் தெரிகின்றிலர்" (கம்பரா. இலங்கையெரி. 5).

கொளுந்து—கொளுத்து (பி. வி.). கொளுத்துதல்=எரித் தல். ஊர் முழுவதையுங் கொளுத்திவிட்டார்கள்.

விளக்குக் கொளுத்துதல்=விளக்கை எரிய வைத்தல்.

குள்—குர்—குரு. குருத்தல்=சினத்தல்.

குரு—வ. குருத் (krudh)—க்ரோத—குரோதம்=சினம்.

குரு=1. ஒளி. "குருமணித்தாலி" (தொல். சொல். 303, உரை). 2. நிறம். "குருவுங் கெழுவும் நிறனாகும்மே" (தொல். உரி. 5). 3. சிவப்பு. 4. மாழைகளை (உலோகங்களை) மாற்றும் சிந்துரம்.

குரு—குருதி=1. சிவப்பு. "குருதித் துகிலின் னுறையை" (சீவக. 926). 2. அரத்தம். (திவா). 3. செவ்வாய். (திவா). ம. குருதி.

குருதிக்காந்தள்=செங்காந்தள். (சீவக. 1651, உரை).

குருதிக் கிழமை=செவ்வாய்க் கிழமை. "புதிய சீலை...குருதி வாரந் தனக்குக் கொஞ்ச நாளிற் கிழியும்" (அறப். சத. 61).

குரு—குருந்து=குருந்தக்கல். (W.).

குருந்து—குருந்தம்=குருந்தக்கல், மாணிக்க வகையுள் ஒன்று.

குருந்தம்—குருவிந்தம்—வ. குருவிந்த.

குரு வெறும்பு—செவ்வெறும்பு, முசிறு.

குள்—குழு—கெழு=நிறம். "குருவுங் கெழுவும் நிறனாகும்மே" (தொல். உரி. 5).

ஒ. நோ: குழு (குமுவு)—குமுதகை—கெழுதகை.

கெழு—கேழ்=1. ஒளி. "நயங்கேழ் பெருவள நல்கு நல்லூர" (தஞ்சைவா. 392). 2. நிறம். "ஒண்கேழ் நூற்றித ழலரின்" (புறநா. 27).

கேழ்—கேழ்ப்பை=கேழ்வரகு. கேழ்வரகு=செந்நிற வரகு வகை.

குள்—கள்—காள்—காளம்=சுடுகை.

காளவனம்=சுடுகாடு. (சூடா.).

காளவாய்=சுண்ணாம்புக்கல் சுடும் சூளை.

காளவாய்—காளவாயல்—காளவாசல். காளவாய்க்கல்= சூளையினின்று வந்த புதுச் செங்கல்.

L. *calor*, heat, *E. caloric*, heat.

காள்—காழ்=1. ஒளி. (திவா). 2. ஒளிக்கல். "பருக் காழுஞ் செம்பொன்னும்" (பு. வெ. 9 : 14). 3. முத்து. "பரூஉக் காழாரம்" (சிலப். 4 : 41). 4. பளிங்கு. (பிங்). 5. மணிவடம். "முப்பத்திரு காழ்" (சிலப். 6 : 87).

காழ்—காசு=1. பொன். (ஆ. நி.). 2. பொற்காசு. 3. காசுமாலை. "காசும் பிறப்புங் கலகலப்ப" (திவ். திருப்பா. 7). 4. ஒரு பழைய பொற்காசு. 5. சிறு செப்புக்காசு. "நெஞ்சே யுனையோர் காசா மதியேன்" (தாயு. உடல் பொய். 72). 6. காசுப்பொது. எப்பேர்ப்பட்ட பல காசாயங்களும் (S. I. I. i, 89). 7. மணி. "நாண்வழிக் காசுபோலவும்" (இறை. 2, உரை). 8. மேகலை. "பட்டுடை சூழ்ந்த காசு" (சீவக. 468). 9. வெண் பாவின் இறுதிச் சீர் வாய்பாடுகளுள் ஒன்று. "ஓரசைச் சீரும் ஒளிசேர் பிறப்புமொண் காசு மிற்ற சீருடைச் சிந்தடியே முடி வாம்" (யாப். காரிகை. நூற். 7).

கள்—கன்—கண—கணம்=சூடு, கணைநோய்.

கணமாந்தம்=காய்ச்சலோடு கூடிய மாந்த நோய்.

கண—கணப்பு=1. குளிர்காயுந் தீ. 2. கணப்புச் சட்டி.

கண—கணத்தி=செங்கடம்பு.

கண கணத்தல்=உடம்பு சூடாயிருத்தல். உடம்பு கண கணக்கிறது.

கண—கணை=1. சூட்டுநோய். 2. கால்நடை நோய் களுள் ஒன்று.

கள்—கடு. கடுத்தல்=1. உறைத்தல். 2. வயிற்றுளைச் சலிற் காந்துதல். வயிற்றுக் கடுப்பு. 3. சிறுநீர் துளி துளி யாகச் சிறுத்து மிகச் சுடுதல், நீர்க்கடுப்பு. 4. நோவுத்திறம் மிகுதல். தேட்கடுப்பு (புறநா. 392).

கடு—கடுப்பு=1. எரிநோவு. "கடுப்புடைப் பறவைச்சாதி" (பெரும்பாண். 229). 2. வெகுளி. "கடுந்தவை யணங்குங் கடுப்பும்" (பரிபா. 4 : 49).

கடு—கடுமை=1. வெம்மை (கலித். 12 : 5, உரை). 2. சினம். (சிலப். 5 : 55, உரை). 3. கண்டிப்பு. 4. கொடுமை. (சூடா.). 5. முரட்டு வெறித்தனம்.

கடு=1. கார்ப்பு. (சூடா.). 2. துவர்ப்பு (மூ. அ). 3. கடுக்காய். "கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பில்" (மலைபடு. 14). 4. கடுநோவு, கடுத்திற வாலி.

கடு—கடுகு=காரமுள்ள விதை. "கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா?" (பழ).

கடுகு—கடுகம்=1. கார்ப்பு. (திவா.). 2. சுக்கு மிளகு திப்பிலி யென்னும் காரமுள்ள முச்சரக்குள் ஒன்று. 3. முக்கடுகம் போன்ற மூவறநெறிகளைப் பாட்டுத் தோறுங் கூறும் நூல். "கடுகங் கோவை பழமொழி மாமூலம்" (தனிப்பா.) ஒ. நோ : உலகு—உலகம்.

கடுகம்—வ. கடுக. (katuka).

கடுகு—கடுக்கு. கடுக்குதல்=சினக் குறிகாட்டுதல். "ராம தூதனென்று கடுக்கி" (இராமநா. உயுத். 62).

கடுக்கெனல்—கடுமைக் குறிப்பு. "கடுக்கெனச் சொல் வற்றும்" (நாலடி. 348).

கடு கடுத்தல்=1. சினக்குறிப்புக் காட்டுதல். "முகங் கடு கடுத்தான்" (பிரபோத. 11 : 46). 2. மிகவுறைத்தல். 3. விறு விறுப்போடு வலித்தல்.

கடுமான்=அரிமா (சிங்கம்). "கடுமான் கிழ்ந்த கடமலை" (கல்லா. 67 : 16).

கடுவன்=கடுமையான ஆண் விலங்கு. "குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்" (தொல். மர. 69); கடுவன் பூனை (திவா.); கடுவன் பன்றி (குறவர் வழக்கு).

கடு—காட்டம்=உறைப்பு. தெ. காட்டு (gāṭu).

கடு—கடி=1. விளக்கம். "அருங்கடிப் பெருங்காலை" (புறநா. 166 : 24). 2. சிறப்பு. "அருங்கடி மாமலை தழீஇ" (மதுரைக். 301). 3. காவல். "கடியுடை வியனகரவ்வே" (புறநா. 95 : 3). "கடிமரத்தாற் களிறணைத்து" (பதிற்றுப் 33 : 3).

4. கார்ப்பு. "கடிமிளகு தின்ற கல்லா மந்தி" (தொல். சொல். 384, உரை).

கடி—கரி. கரித்தல் = 1. உறுத்தி வலித்தல். எண்ணெய் பட்டுக் கண் கரிக்கிறது. 2. வெறுத்தல். "கரித்து நின்ருன் கருதாதவர் சிந்தை" (திருமந். 2431).

கரி—கரிப்பு = காரம். "ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே" (தொல். உரி. 86).

கரி—கார்—காரம் = 1. உறைப்பு. (சூடா). 2. கார்ப்புப்பு. (W.). 3. சாம்பலுப்பு. 4. சீலைக்காரம். 5. சாயக்காரம். 6. சீனிக்காரம். 7. வெண்காரம். 8. அக்கர காரம். (தைலவ. தைல. 112). 9. ஒரு செயற்கை நஞ்சு (கோளக பாடாணம்). (சங். அக.). 10. திருநீறு. "காரமென்றுரைப்பர்" (திருக் காளத். பு. 26 : 4). 11. சினம். அவன் என்மீது காரமாயிருக் கிருன்.

காரசாரம் = 1. வேண்டிய அளவாக அமைத்த காரச்சுவை. "காரசாரஞ் சேர் சாற்றிலே கலந்த சோற்றிலே." (அருட்பா, vi, அவாவறுப்பு, 2). 2. வினைத்திறமை. அவன் பேச்சில் ஒன்றுங் காரசாரமில்லை.

கார மருந்து = 1. பிள்ளை பெற்ற பெண்களுக்குக் கொடுக் கும் காரமருந்து. 2, தோலை எரித்துத் தின்னும் மருந்து.

கார்—கார்த்தல் = உறைத்தல் (பிங்.).

கார்—கார்ப்பு = உறைப்பு (சூடா.).

காரம்—வ. க்ஷார. இத் திரிவைப் பல்கலைக்கழக அகர முதலி (Lexicon) தலை மாற்றிக் குறிக்கின்றது.

ம. காரம், தெ. காரமு, க., து. கார.

காள்—காய், ஒ. நோ : மாள்—மாய்.

காய்தல் (செ. கு. வி.) = 1. வெயில் எறித்தல். கதிரவன் எரிதல். வெயில் காய்கிறது. 2. நீர் முதலியன காய்ச்சப்படுதல். வெந்நீர் காய்கிறது. 3. சுடுதல். அவனுக்கு உடம்பு காய்கிறது. 4. ஒளி வீசுதல். நிலாக் காய்கிறது. 5. பசித்தீயால் வருந் துதல். காலையிலிருந்து எனக்கு வயிறு காய்கிறது. 6. விடாய்த் தல். "காய்தலு முண்டக் கள்வெய் யோனே" (புறநா. 258). 7. பொருள் உலர்தல். புழுங்கல் காய்கிறது. 8. புண் ஆறுதல். புண் காய்ந்து வருகிறது.

(செ. குன்றுவி). 1. எரித்தல். "மதவேள் தன்னுடலங் காய்ந்தார்" (தேவா. 15 : 6), "காமனைக் காய்ந்த கண்ணன்" 2. அழித்தல். "கஞ்சனைக் காய்ந்தானை" (திவ். பெரியதி. 7: 6 : 5). 3. விலக்குதல். "கோப முதலிய குற்றங்காய்ந்தார்" (பெரியபு. அப்பூதி. 2). 4. வெகுளுதல். "காய்தலு முவத்தலும்' தொல். கற்பியல், 6). 5. கடிந்து கூறுதல். "கறுத்தெழுந்து காய்வாரோடு" (நாலடி. 315). 6. வெறுத்தல். "காய்த லுவத்த லகற்றி யொரு பொருட்க ணாய்தல்" (அறநெறி. 22) 7. வருத்துதல். "காய்கின்ற பழவினை போம்" (குற்று. தல. நூற்பய. 15).

ம., க. சாய், தெ. காயு, து. காயி.

காய்—காய்கை—காகை—காங்கை=வெப்பம், சூடு. திருச்சியைவிட மதுரை காங்கையான இடம்.

தெ. காக (kāka), க. காங்கெ (kāṅke).

காய்—வ. காச் (kāś).

ய—ச, போலி. எ—டு: இயை—இசை, நெயவு—நெசவு, நேயம்—நேசம், வாயில்—வாசல்.

இங்ஙனம் யகர சகரப் போலியால், ஒளி வீசுதலைக் குறிக்கும் காய் என்னும் தென்சொல் வடமொழியில் காச் (kāś) என்று திரிந்துள்ளது. வடமொழியில் இச் சொல்லிற்கு வேரில்லாமலிருப்பதுடன், இதிலுள்ள சகரம் தமிழ்ச் சகரமாயிருப்பதும், கவனிக்கத்தக்கது. 'ப்ர' என்னும் முன்னொட்டுப் பெற்று, இச் சொல் 'ப்ரகாச்' என்று பெரிதும் வழங்குகின்றது.

காய்—காய்ச்சல்=1. வெயில், வெப்பம். 2. சுரநோய். 3. உலர்ச்சி. புதுநெல்லை இரண்டு காய்ச்சல் போட்டுக் குத்த வேண்டும். 4. மனவெரிச்சல், பொறாமை.

காய்ச்சுக் கட்டி=இளநீரிற் பாக்கு நறுமணச் சரக்குகள் முதலியன சேர்த்துக் காய்ச்சிய துவர்க்கட்டி.

காய்ச்சுக் கட்டி—காசுக் கட்டி.

காய்—காயம்=1. குழம்பில் வெந்த கறித்துண்டு. "நெய் கனி குறும்பூழ் காய மாக" (குறுந். 389). 2. உறைப்பு. (பிங்.). 3. மிளகு. "காயத்தின் குழம்பு தீற்றி" (சீவக. 788). 4. கறிக் கூட்டுச் சரக்கு. "காயங்களான் இனிய சுவைத்தாக்கி" (குறள். 233, பரி. உரை). 5. வெள்ளுள்ளி. "காயமுங் கரும்பும்" சிலப். 23 : 45). 6. பெருங்காயம். 7. கடுகு, ஓமம், வெந்தயம்,

உள்ளி, பெருங்காயம் ஆகிய ஐங்காயம் (தைலவ. தைல. 135). 8. காய மருந்து.

ம. காயம், தெ. காயமு.

காய மருந்து = கருவுயிர்த்தவளுக்குக் கொடுக்கும் கார மருந்து.

காய்—காய்து—காய்ந்து—காந்து. ஒ. நோ: வேய்—வேய்ந்தான்—வேய்ந்தன்—வேந்தன் = முதற் காலத்தில் முடியணியும் உரிமையைச் சிறப்பாகக் கொண்ட பேரரசன். கொன்றை வேய்ந்தான் —கொன்றை வேய்ந்தன்—கொன்றை வேந்தன் = கொன்றை மாலையணிந்த சிவன்.

காந்துதல் = (செ. கு. வி.) 1. திகழ்தல் (பிரகாசித்தல் "பரம்பிற் காந்து மிளமணி" (கம்பரா. நாட்டுப். 7). 2. வெப்பங் கொள்ளுதல். 3. கருகுதல். சோறு காந்திப் போயிற்று. 4. எரிவெடுத்தல். புண் மருந்து காந்துகின்றது. 5. மனங்கொதித்தல். "புத்திபோய்க் காந்துகின்றது" (கம்பரா. சடாயுகா. 37). 6. பொருமை கொள்ளுதல். மூத்த குடியாள் இளைய குடியாளைக் கண்டு காந்துகிறாள்.—(செ. குன்றுவி.) 1. சுடவைத்தல். (யாழ்ப்.). 2. சுவறச் செய்தல். (யாழ்ப்). 3. சினத்தல். "காந்தி மலைக்குத்து மால்யானை" (வள்ளுவமாலை, 11).

கார்து — காந்தல் — காந்தள் = விளக்கெரிவது போல் விளங்கித் தோன்றும் கோடற்பூ (கார்த்திகைப் பூ). 2. காந்தள் மலரணிந்து வேலன் வெறியாடுதலைக் கூறும் புறத்துறை. "வேலன் வெறியாட் டயர்ந்த காந்தளும" (தொல். புறத். 5). 3. முருகனுக்குச் சிறப்பாக வுரிய காந்தளைச் சிறப்பித்துக்கூறும் புறத்துறை.

"கருங் கடலுள் மாத்தடிந்தான்
செழுங் கார்தட் சிறப்புரைத்தன்று" (பு. வெ. 6 : 9)

காந்து—காந்தாளம் = சினம். (W).

காந்து—காந்தாளிகம் = சின்னி (Indian shrubby copper leaf).

காத்து—காந்தி = 1. ஒளி (சூடா). 2. அழகு. (பிங்.). 3. ஒளிக்கதிர். (W). 4. வெப்பம். (மூ. அ.). 5. காவிக்கல் (W.).

காந்து—காந்துகம் = வெண் காந்தள்.

காந்தள் என்பது முதலிற் செங்காந்தளைக் குறித்துப் பின்னர் இரு காந்தட்கும் பொதுவாகி யிருக்கலாம். சேயோனான முருகனுக்குச் செங்காந்தளே சிறப்பாக ஏற்கும்.

காந்து—*L. cande*o, to glow with heat, to shine, glitter, to be of a shining white.

இலத்தீன் வினைச் சொற்களைத் தன்மை யொருமையீறாகிய 'o' அல்லது நிகழ்கால வினையெச்ச வீறாகிய 're' சேர்த்துக் குறிப்பது மரபு. இவற்றை நீக்கின், எஞ்சி நிற்பது வினை முதனிலையென அறிக.

*L. candela*, a wax or tallow candle, *AS. candel*, *OE.* candel, *AN.*, *OF.* candel(l)e *E. candle* (f. *candere*, to glow), cylinder of wax, tallow spermaceti, cte., enclosing wick, for giving light.

*L. candidus*, shining white, white, *candidum*, n. white colour, a. honest, straight forward. *E. candid*, white, fair, sincere, honest, *E. candescent*, glowing with white heat, f. *L. candeseere*, f. *candere*, be white.

*L. candidatus*, clothed in white; a candidate for office, who among the Romans was always clothed in white, for the consulship. *E. candidate*, one who offers himself or is put forward to be elected to an office, orig. white-robed.

*L. candor*, whiteness, sincerity, *E. candour*, open-mindedness, frankness, impartiality.

*E. chandler*, dealer in candles. *ME.*, *AF. chandeler*, *OF. chandelier* f. *L. candela.*

இலத்தீனில் தகர முதற் சொல்லாயிருந்தது, பிற்காலத்தில் ஆங்கிலப் பிரெஞ்சு மொழியிலும் இடையாங்கிலத்திலும் சகர முதற் சொல்லாகத் திரிந்து விட்டமையை நோக்குக. இச் சகர முதற் சொல்லே வேத மொழியிலும் சமற்கிருதத்திலும் முதலுயிர் குறுகியும் குறுகாதும் உள்ளது.

*Skt. cand,* to shine, be bright; to gladden.

*canda*, the moon, L.

*candaka*, pleasing, W; the moon W., moon light, W.

*candira*, the moon, Bhām, ii, 120.

*candra*, glittering, shining (as gold), having the brilliancy or hue of light (said of gods, of water [RV. x. 121, 9; TS. vi] & of Soma), RV.; VS., TS. vi; TBr. i; m. the moon.

*cāndra*, lunar.

*scand*, to shine.

*scandra*, shining, radiant.

இங்ஙனம் திகழ்தலையும் திகழும் திங்களையும் குறிக்கும் வடசொற்கள், காந்து என்னும் தென்சொல்லை அடிமூலமாக வும், இலத்தீன் வழியாக வந்த திரிசொல்லை நேர்மூல மாகவும், கொண்டனவா யிருத்தல் காண்க.

ஒ, நோ: திகழ்—திங்கள், தகம் - தங்கம். 'திகள்' என்னும் வடிவம் இறந்துபட்டது. புரள் - பிரள்—பிறழ் என்னும் திரிபில் இடைப்படுசொல் இறந்து பட்டமை காண்க.

தகுதல்=எரிதல், விளங்குதல், தகதக வென்று சொலிக் கிறது என்னும் வழக்கை நோக்குக. ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழம்பாண்டிநாடும் தனித்தமிழிலக்கியமும் முற்றும் மறைந்து போனமையால், பல இணைப்பண்டுச் சொற்களை இன்று காட்ட இயலவில்லை யென்பதை அறிக.

---

## தேவை

தமிழ், தெலுங்கு, கன்னடம் மலையாளம் ஆகிய நான் மொழியும் எழுதப் படிக்கத் தெரிந்தவரும், குறைந்த பக்கம் பள்ளியிறுதி தேறியவருமான ஒருவர்க்குரிய பதவி, தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்ககத்தில் வெறுமையாயிருக்கின்றது. பதவி வேண்டுவார் உடனே கீழ்க்கண்ட முகவரிக்கு வேண்டுகோள் விடுக்க.

இயக்குநர்,
செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்ககம்,
அரும்பொருட் காட்சியகப் பரம்பு
(Museum Compound),
எழுமூர், சென்னை—8.

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

(சிலம்பு ௫௨, பரல் ௫, ௨௧௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

கலிங்கம் என்ற ஆடையைப் பற்றிச் சங்க இலக்கியத்தில் பல பாடல்கள் கூறியிருப்பினும் வடநூல், பாலிமொழி நூல் களில் கூறப்படாமை கவனிக்கத்தக்கது. மானசல்லோசா என்ற பிற்காலத்து வடமொழி நூல் கலிங்கத்தைப் பற்றிக் குறிப் பிட்டிருப்பினும் இந்த நூலில் பல தமிழ்நூற் செய்திகள் கூறப் பட்டிருப்பதைக் காணலாம். காழகம் என்ற ஒருவகை ஆடை சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. 'காழகத்தாக்கம்' என்று பட்டினப்பாலையில் கூறப்பட்ட பொருள்களில் காழகத்தில் நெய் யப்பட்ட ஆடையும் கூறப்பட்டிருக்கலாம். காழகம் என்பதைப் பர்மா நாடு என்று சிலர் கொண்டனர். அறிஞர் சிலர் காழகம் எனப்படும் கடாரம் தாய்லந்தில் இருந்த Kedha என்ற துறைமுகத்தையும் அதைச்சுற்றிய நாட்டையும் குறித்தது என்பர். கி.பி. இரண்டாம் நூற்ருண்டைச் சேர்ந்த பதஞ்சலி 'கடகா' என்ற ஒருவகை ஆடையைக் குறிப்பிடுகின்ருர். கடாரத்தில் இருந்து வந்த ஆடையை ஒருவகைப் பட்டு என்று சிலர் கருதுவர். மிகப் பண்டைக் காலத்திலேயே கடார நாட் டிற்கும் தமிழ்நாட்டிற்கும் வணிகத் தொடர்பு இருந்தது. கடாரத்திலிருந்து இருப்பு தமிழகத்திற்கு இறக்குமதியானதாகத் தெரிகின்றது. கடாரம் என்ற பெயரே பெரிய செப்புப் பாத்தி ரத்தைக் குறித்து வழங்கியது. கடாரத்திலிருந்து தமிழகத்துக்கு வந்த பெரிய நாரத்தங்காயைக் கடாரநாரத்தை, கடாரங்காய் என்றழைத்தனர். கடாய் என்பது இரும்பினுல் அல்லது செம் பினுல் செய்த பொரிக்கஞ்சட்டியைக் குறிக்கும். இதுவும் முதலில் கடாரத்திலிருந்து வந்திருக்கலாம். காழகம் என்ப தற்குக் கடாரம் என்று திவாகர நிகண்டு பொருள் கூறியுள்ளது. 'தொடுகடற் காவற் கடுமுரட் கடாரத்தை' (S. 1. 1. 2. 107) இராசேந்திர சோழன் வென்றதாகக் கல்வெட்டுச் செய்தி கூறி யுள்ளது.

"கடுங்களி ருேட்டலிற் காணுந ரிட்ட
நெடுங்கரைக் காழக நிலம்பர லுறப்ப"

—மதுரைக்காஞ்சி 597 - 598

"ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ"
—திருமுருகாற்றுப்படை 183 - 184

"களிறுமேல் கொள்ளவும் காழக நீப்பவும்" —புறம். 41

"காழகஞ் செறிந்த வுடையினன் காழகிற்" —சிலம்பு 22 : 98

"நீயே வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே" —கலித்தொகை - 7

"விரைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்"
—கலித்தொகை - 73

"ஒருத்தி வரியா ரகலல்குற் காழகம்
ஒருத்தி யரியார் ஞெகிழத் தணிசுருத் தட்ப"
—கலித்தொகை - 92

காழகம் என்ற ஆடை நீல நிற ஆடை என்று தெரிகின்றது. கலித்தொகை உரையில் துகிலாடை என்றும் நீல ஆடை என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. முதலில் நீல நிறமாகவும் கருநிறமாகவும் இந்த ஆடை இருந்திருப்பினும் வேறு நிறத்திலும் இந்த ஆடை இருந்திருக்கலாமென்று தெரிகின்றது. காழக ஆடையை ஆடவரும் பெண்டிரும் அணிந்தனர். அந்தணர் காழகத்தை அணிந்து நீராடிப் புலராத ஆடையோடு முருகனைத் தொழுததைப் பற்றித் திருமுருகாற்றுப்படை கூறியுள்ளது. மதுரைக்காஞ்சியில் நெடிய கரையையுடைய நீல நிறத்தையுடைய புடைவை என்று காழகம் என்பதற்குப் பொருள் கூறப்பட்டுள்ளது. கலித்தொகையில் தொழில் மாட்சிமைப்பட்ட கைச்சரடு என்று காழகத்திற்குப் பொருள் கூறப்பட்டுள்ளது. காழகத்தால் செய்த ஒருவகைச் சட்டை என்று தெரிகின்றது. பரத்தையரோடு ஆடிய தலைவனின் கரையையுடைய காழக ஆடை கிழிந்ததைப் பற்றியும் கலித்தொகை கூறியுள்ளது. முற்பட்ட சங்கநூல்களைவிடச் சிலம்பிலும் கலித்தொகையிலும் காழகத்தைப்பற்றிய செய்திகள் வருகின்றன. கப்பல் வழியாகத் தமிழ்நாட்டுக்கு வந்து மதுரையில் விற்ற ஆடைகளில் புங்கர்க்காழகம் என்ற ஆடை சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. காழகம் என்பதையும் கடாரம் என்பதையும் வரலாற்று ஆசிரியர்கள் மலேயாவிலும் சுமத்ராவிலும், தாய்லந்திலும் இருப்பதாக மாறுபட்ட கருத்தொடு கூறுவர். பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார் மலேயா நாட்டின் கீழ்முனையில் கடாரம் இருந்ததாகவும் இந்த நகரே சிரிவிஜயப் பேரரசின்

தலைநகராக இருந்ததாகவும் கருதுவர். சங்க காலத்தில் பட்டினப்பாலையில் சொல்லப்பட்ட காழகம் இதுவாகவே இருக்கலாம். கலிங்கத்துப் பரணியும் கடாரத்தைப்பற்றிக் கூறியிருக்கின்றது. இராசேந்திர சோழன் வென்ற கடாரம் இதுவே என்று கூறுவர். வடமொழியில் 'கடாகா' என்று கல்வெட்டுக்கள் கூறும். தமிழில் கிடாரம் என்றும் அழைக்கப்படும். மலேயாவிலிருந்து ஈயம் நிறையக் கிடைத்ததால் கடாரத்திலிருந்து ஈயம் பூசப்பட்ட கடாரப் பாத்திரங்கள் தமிழகத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கலாம். சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட 'புங்கர்க் காழகம்' மலேயாவில் இருந்ததாகக் கூறப்பட்ட காழகத்திலிருந்து வேறுனதாகத் தெரிகின்றது. பிற்காலத்தில் அச்சிக் கிச்சிலி என்று ஒரு நாரத்தையின் பெயர் வழங்கியுள்ளது. இது சுமத்ராவில் உள்ள 'அச்சி' (Achih) என்ற நாட்டில் இருந்து ஏற்றுமதியான கிச்சிலிப்பழமாகும். இந்த அச்சி நாட்டிற்கருகில் கடாரம் என்ற துறைமுகம் இருந்தது. ஆதலின் கடார நாரத்தை என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட கிடாரவன் என்ற அகில் வகையும் இங்கிருந்து வந்ததாகத் தெரிகின்றது. இங்கிருந்து அகில் ஏற்றுமதியானதுபற்றிச் சீன மொழி நூல்கள் கூறியுள்ளன. கம்பராமாயணத்தில் ஒரு குரங்கு காழக ஆடையை அணிந்து கங்கையின் ஆழத்தை அளந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

"காழகம் இட்ட குரங்கினன் கங்கையின்
ஆழ மிட்ட நெடுமையி னுனரைத்
தாழ விட்டசெந் தோலான் தயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினன்."

—கம்பராமாயணம்-கங்கைப்படலம்

பிற்காலத்தில் காழகம் என்று மாறிற்று. காளகம் என்றும் அழைக்கப்பட்டது. 'காளக வுடையாள் கரிய கூறுவாள்' என்று பாகவதம் (10 : 1 : ச. 1) கூறுவதிலிருந்து காளி கரிய ஆடையான காளக ஆடையை அணிந்திருந்தாள் என்று தெரிகின்றது.

(தொடரும்)

---

## அறிவியல் நூல்கட்கு ஆக்கந் தருக

ஆங்கிலம் முதலிய அயல் மொழிகளில் உள்ள இயற்கைப் பொருள் நூல்களையும், உயிர் நூல்களையும் கடவுள் நூல்களையும் தமிழில் மிகுதியாக மொழிபெயர்த்து அவற்றைப் பயிலும்படி செய்தல் வேண்டும்.

—மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை. பக். 199)

# பழந்தமிழில் மக்கட் பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

(முன்னிதழ்த் தொடர்ச்சி)

3. அகம்பன் மாலாதனர் :

அகம்பன் மாலாதனர் கடைக்கழகப் புலவர்களுள் ஒருவர். நற்றிணையில் 81 ஆம் செய்யுளை இவர் இயற்றியுள்ளார். இவர் மதுரை மாவட்டத்துப் பெரியகுளம் வட்டத்திலுள்ள அகமலை என்னும் ஊரினர் என்றும், இவ்வூர் அக்காலத்து அகம்பல் என்றழைக்கப்பட்டிருக்கலாம் என்றும், அகம்பல்மால் என்ப தால் இவர் அவ்வூர்த் தலைவராயிருந்திருக்கவேண்டும் என்றும் நற்றிணையைப் பதிப்பித்த பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் குறிப்பிடுகிருர்.

'அல்' ஈறுபெற்ற ஊர்ப்பெயர்கள் எவையும் இல. எய்யல் எனும் ஊரின் பெயரும் எயில் என்பதன் திரிபு. ஆரைக்கல், வைகல் என்பனவும் அல் ஈறு பெற்றனவல்ல. எறிச்சலூர், மாடலூர் என்பன ஊர் என்னும் ஈறுபெற்றன. அகம்பல் அகமலையாகத் திரிந்தது என்பதும் இயையுமாறில்லை. அகம் என்று முடியும் ஊர்கள் பலவுள. திருவேரகம், திருவேடகம், மருதகம், கையகம், கல்லகம் என்பன சான்ருகும். ஆயின், அகம்பு அல்லது அகம்பல் என்னும் ஊர்ப்பெயரைக் காணக் கூடாமையானும் அகம்பல் ஊர்ப் பெயராயின் அகம்பலூர் மாலாதனர் என அழைக்கப்பட்டிருக்க வேண்டுமாதலாலும் அகம்பன் என்பதே இவருடைய இயற்பெயர் எனக்கொள்வது ஏற்புடைத்தாகிறது.

அகம்பன் என்பது சமண சமயத்தவரிடை இயற்பெயராக வுள்ளது. அகம்பன் எனப் பெயர் கொண்டவர் பலர். அகம் பன் என்னுஞ்சொல் அசைவற்றவன், உள்ளடக்கம் (புலனடக் கம்) உள்ளவன் எனப் பொருள் தருதலால் சமண சமயத்தாரின் இயற்பெயராயிற்று. மால் என்பது பெருமை என்றும் அருகன் என்றும் பொருள்படும். (சூடா)

*மால் - பெருமை. "சினமால் விடையுடையான்" (திருவாச 34-3)*
*மால் - அருகன். "இன்பக்கடலாக்கித் தருமால்" (சீவக. 931)*

அகம்பன் மால் என்பதால் இவர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பதும் ஆதன் என்னும் குடிப் பெயரைக் கொண்

டிருப்பதால் சேரக்கிளை மரபினர் என்பதும் இவர் பெயரால் நமக்குத் தெளிவாகிறது.

4. அகுதை :

பரிசிலர்க்கு யானையும் பொன்னும் வரையாது அளிக்கும் வள்ளலாகத் திகழ்ந்த அகுதை என்னும் மன்னன் கடைக் கழக காலத்தில் சிறந்து விளங்கினான். இவன் போர் செய்வதில் வல்லவன். இவனுடைய தலைநகர் கூடல் என்பதால் பாண்டிய அரசருள் ஒருவனாகத் தெரிகிறது. இவனைக் குறித்துக் கபிலரும் வெள்ளெருக்கிலையாரும் பாடியுள்ளனர்.

''சீர் கெழு நோன்றாள் அகுதைகண் தோன்றிய
பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ'' (புறம். 233)

''இன்கடுங்கள்ளின் அகுதை'' (குறுந். 298)

''நன்மா வீசும் வண்மகிழ் அகுதை'' (அகம். 76)

''வயங்கு பெருந்தானை அகுதை'' (அகம். 112)

''மணநாறு மார்பின் மறப்போர் அகுதை
குண்டுநீர் வரைப்பின் கூட லன்ன'' (புறம். 347)

புறம் 347 ஆம் பாடலில் மட்டும் அஃதை எனப் பாட வேறு பாடு இருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது. அஃதை பெண்பாற் பெயராதலின் இப் பாட வேறபாடு ஏடெழுதுவோரின் பிழை யாக இருத்தல் வேண்டும். திரு. உ. வே. சா. அவர்கள் சிலப் பதிகாரத்தைப் பதிப்பிக்க ஒப்பு நோக்கிய ஓலைச் சுவடிகளுள் ஒன்றில் 'இந்திர விழவூரெடுத்த காதை' என்பது 'இந்திர இழவூரெடுத்த காதை' எனக் காணப்பட்டதாகக் கூறும் செய்தி இங்குக் கருதத் தக்கது.

கன்னடத்தில் அகுந்தி என்னும் சொல் மிகுதி, பெருக்கம், மேன்மை என்று பொருள்படுகிறது.

க. அகுந்தலெ ஆய்த்து—பெரிதாயிற்று, உயர்வாயிற்று.
அகுந்தலெ வடெ—மேன்மையுறு, தலைமைகொள்.

ஆகு என்னும் வினைச்சொல் கன்னடத்திலும் தெலுங் கிலும் அகு என நெடுமுதல் குறுகும். தமிழிலும் நெடுமுதல் குறுகுதல் இயல்பு. ஆகு - அகு என்னுஞ் சொல்வடிவங்கள் ஆதல், ஓங்குதல், செழித்தல், மேம்படுதல் என்னும் பொருள் களில் பெருக வழங்கிய காலத்தில் இச் சொல்லினடியாக மேன்மையாளன் எனப் பொருள்படும் அகுதை (ஆகு+த்+ஐ)

ஆண்பால் இயற் பெயராயிற்று. தகு+இ (தகு+த்+இ)—தகதி; மன்+உ (மன்+த்+உ) மந்து (அரசன்) எனப் பெயர்ச் சொற்களில் தகரமெய் எழுத்துப்பேறாய் வருதலை ஒப்பு நோக்குக.

5. அஞ்சி :

அஞ்சி என்னுஞ்சொல் மலையாளத்தில் படைத்தலைவன் (Commander) என்றும் குறுநில மன்னன் என்றும் பொருள் படுகிறது. அஞ்சி என்பதற்குத் தலைவன் என்று யாழ்ப்பாண அகர முதலியில் பொருள் கூறப்பட்டுள்ளது. அஞ்சுபவன் தலைவனாக இயலாமையால் இச் சொல் அஞ்சு எனும் வினைச் சொல்லடியாகத் தோன்றியிருத்தல் இயலாது. மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் இதனை, அச்சன் என்பதன் திரிபாக்கி, அச்சன்—அச்சி—அஞ்சி என வழங்குவதாகக் கூறுகிறார். நம்பி, நள்ளி என இகரவீற்றுச் சொற்களும் ஆண்பாற் பெயரா கின்றன. நாவாய்கன் என்னுஞ் சொல் நாய்கன் என மருவிய வாறு 'அஞ்சி' மரூஉச் சொல்லாதலும் கூடும்.

அதியமான் நெடுமான் அஞ்சி சேரக்கிளை மரபினன். அதியர் என்பது குடிப்பெயர். நெடுமான் இயற்பெயர். அஞ்சி சிறப்புப் பெயர். இதனைப் பதவி குறித்த சிறப்புப் பெயர் என்பது மேலும் பொருந்தும். அஞ்சி என்பதற்குப் படைத் தலைவன் என்று பொருள் கொள்வதற்கேற்ற வகையில், கன்னடத்தில் இச் சொல் உறுதி வலிமை, தந்திரம், திட்டம், பங்கு எனப் பொருள் தருவதும் தெலுங்கில் ஒருவகை விளையாட்டைக் குறிப்பதும் நம் கருத்துக்கு அரண் செய்கின்றன.

க. அன்சு—திட்டம், தந்திரம், பங்கு
அச்ச—தூய்மை, அழகு
அச்சு—உறுதி, வலிமை

படைப் பிரிவுகளுள் ஒரு பிரிவின் தலைவனையும் குறுநில மன்னனையும் குறித்த பதவிப் பெயராக 'அஞ்சி' விளங்கிற்று.

இராவணனின் தம்பி வீடணனின் பெயரும் அஞ்சி என இருந்திருத்தல் வேண்டும். விபீஷண என்னும் வடசொல் லுக்கு அச்சம் என்றும் அஞ்சத்தக்கவன் என்றும் பொருள். வடமொழியாளர் பிறமொழிகளிலுள்ள இடப்பெயர் இயற்பெயர் ஆகியவற்றைத் தம்மொழியில் பெரும்பாலும் மொழிபெயர்த்துக் கொள்வரேயன்றி உள்ளபடி ஆள்வதில்லை. முதுகுன்றத்தை விருத்தாசலம் என்றும், அடியார்க்கு நல்லாரை பக்தவத்சலம்

என்றும் அவர்கள் ஆளுதல் காண்க. வீடணனுக்கு இருந்த அஞ்சி என்னும் வேர்ச்சொற் பொருளறியாது அஞ்சச் செய்பவன்[1] எனப் பிறழப் பொருளுணர்ந்து விபீஷணன் எனப் புதுப் பெயரைப் படைத்திட்டுக் கொண்டனர் என்பதே சாலும்.

6. **அஞ்சியத்தை மகள் நாகையார் :**

அகநானூற்றில் 352 ஆம் பாடலை அஞ்சியத்தை மகள் நாகையார் பாடியுள்ளார். அஞ்சிலாந்தை மகள் நாகையார் என்ற பாடவேறுபாடும் இவர் பெயருக்குத் தரப்பட்டுள்ளது. அஞ்சில் என்பது ஊரின் பெயராயினும் ஒரு சுவடியில் மட்டும் இப் பாட வேறுபாடு காணப்படுதலின் அஞ்சியத்தை மகள் நாகையார் என்பதே இவருடைய பெயராகக் கொள்ளலாம். ஒருகால் அகுதை மகள் அத்தை மகள் எனத் திரியினும் ஆந்தை மகள் அத்தை மகளாகத் திரிதலுக்குச் சான்று கிட்டவில்லை.

தந்தை பெயரோடு தாயின் பெயரையும் சேர்த்து உரைப்பது தொன்றுதொட்டு வரும் மரபு. 'உதியஞ்சேரற்கு வெளியன் வேண்மாள் நல்லினி யீன்ற மகன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்' என வருதலைக் காண்க. நாடறிந்த பெருமையுடையாரின் உறவினர்க்கு அவரோடு கொண்ட உறவுப் பெயர் சார்த்திப் பெயரமைதல் இயல்பானது. அதியமான் அஞ்சியின் அத்தை மகள் என்னும் உறவின் முறையால் நாகையார் அறியப்பட்டார். இவரியற்றியதாக ஒரே பாடல் கிடைத்திருப்பதால் இவர் ஔவையாரைப்போல் பெரும் புலவராகப் பெயர் பெறவில்லையென்பதும் அஞ்சியின் பெயரொடு சார்த்தி அறியப்பட்டார் என்பதும் வெள்ளிடை. நாகையார் என்னும் பெயர்க்கரணியத்தை நாகையார் என்னும் தலைப்பில் காணலாம்.

---

## செல்வர்கள் கடமை

தமிழ் நாட்டிற் செல்வர்களாயிருப்பவர்கள் பிறருக்குத் தமிழ் மொழிப் பயிற்சிக்கும் தமிழ்க் கல்லூரிகள் அமைப்பதற்கும் பொருளுதவி செய்ய வேண்டுமே யல்லாமல், இவற்றை விடுத்து ஆரியம் ஆங்கிலம் முதலான பிறமொழிப் பயிற்சிக்கும் அதற்குரிய கல்லூரிகட்குமே பொருளுதவி செய்தல் நன்றாகாது.

—மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை பக். 199)

---

1. Sanskrit—English Dictionary—by Monier Williams.

# பல்கேரிய மொழி-சில படிப்பினைகள்

[டாக்டர் ந. சஞ்சீவி—பேராசிரியை கிருஷ்ணு சஞ்சீவி]

இருபதாம் நூற்றுண்டுத் தமிழின் இமய வெற்றியாய் விளங்கும் கலைக்களஞ்சியம் தரும் குறிப்புக்கள் வருமாறு :

1. ஆதி பல்கேரிய மொழி என்பது யூரல்—ஆல்ட்டேயிக் மொழியாகும். அந்த மொழி பேசிய மக்கள் ஆரும் நூற்றுண்டில் வால்கா நதிப் பகுதியிலிருந்து பல்கேரியாவுக்கு வந்து சேர்ந்தபின், அங்கிருந்த ஸ்வாலியர் (Slavs) மொழியாக ஆக்கிக் கொண்டனர். ஆதியில் பேசிய யூரல்—ஆல்ட்டேயிக் மொழியின் குறிகள் மிகச் சிலவே இப்போது பல்கேரிய மொழியில் காணப்படும்.

2. ஒன்பதாம் நூற்றுண்டில்தான் பல்கேரிய மொழி எழுத்து வடிவம் பெற்றது. சிரில், மெதோடியஸ் ஆகிய கிறிஸ்தவப் பாதிரிமார் பல்கேரிய மக்களிடம் கிறிஸ்தவப் பிரசாரம் செய்ய வந்தனர். அவர்கள் அதற்காகப் பல்கேரிய மொழிக்கு நெடுங்கணக்கு அமைத்தனர். அது கிளாகோலிட்டிக் (Glagofltic) என்று பெயர் பெறும். அதுவரை பல்கேரிய மக்கள் கிரேக்க எழுத்தையே பயன்படுத்தி வந்தனர்.

9ஆம் நூற்றுண்டின் இறுதியிலும் 10ஆம் நூற்றுண்டின் துவக்கத்திலும் பல்கேரிய இலக்கியம் செழித்து வளரலாயிற்று. இது பல்கேரிய மத்திய கால நாகரிகத்தின் பொற்காலம் என்று கூறப்பெறும்.

10ஆம் நூற்றுண்டில் எழுந்த இலக்கியங்கள் ஸ்லாவ் மொழியைப் பரவச் செய்தன. பல்கேரிய மக்களிடையே ஒற்றுமை உண்டாக்கின. ஆதி பல்கேரியர், ஸ்லாவியர் இவர்களிடையே இருந்த வேற்றுமைகளை நீக்கின. ஸ்லாவிய நாகரிகத்தை வளர்த்தன.

துருக்கியர் பல்கேரியாமீது 14ஆம் நூற்றுண்டில் படையெடுத்து வந்து, நாட்டைக் கைப்பற்றி 500 ஆண்டுக் காலம் அரசு புரிந்தனர். பல்கேரிய மக்கள் ஐந்நூறுண்டுகள் அடிமைகளாக வாழ்ந்தபோதிலும், தங்கள் பழைய கவிதைகளைப் பாதுகாத்ததுடன் புதிய கவிதைகளும் யாத்தனர். அக் கவிதைகளில் தங்கள் பண்டைப் பெருமைகளை வருணித்தனர். தங்கள் வீரர்களைப் புகழ்ந்தனர்.

18 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில், பைசி கிலெண்டார்ஸ்க்கி (Paissi Khilendarsky 1722) என்னும் துறவியார், 1762 ல் ஸ்லாவ்—பல்கேரிய வரலாறு என்ற நூலை இயற்றினுர். இதுவே பல்கேரிய மக்கள் புத்துயிர் பெறுவதன் முதல் கட்டமாகும். மக்கள் அடிமைகளாக இருந்தனர். கல்வி கிடையாது. தாய்மொழியை மறந்தனர் நாட்டுப் பற்றை இழந்திருந்தனர். இத்தகைய மக்களைத் துறவியார் தட்டி எழுப்பினுர். இவருடைய நூலே பல்கேரிய இலக்கியத்தின் மறுமலர்ச்சித் தொடக்கமாகும்.

இவருடைய முதல் மாணவரான சாப்ரோனிய் விரசான்ஸ்க்கி (Safroniyi Vrachansky) என்பவர் 1803-5இல் தமது சுய வாழ்க்கை வரலாறு எழுதினுர். இது பொதுமக்கள் எளிதில் அறியக்கூடிய நடையில் இயன்றது. இதில் அவர் பல்கேரிய மக்களுடைய வறுமை நிலை, அடிமை நிலை இரண்டையும் தெளிவாக எழுதினுர். இவர் எழுதிய உபதேசச் சொற்பொழிவுகளே முதல் முதல் (1806) பல்கேரிய மொழியில் அச்சிடப்பட்ட நூலாகும். இவர் பல்கேரிய இலக்கிய வளர்ச்சிக்கு அடி கோலியவர்.

நாட்டுப் புரட்சிக் கொள்கைக்கு வித்திட்டவர் என்று கருதப்பெறும் ஜார்ஜ் ராக்காவ்ஸ்க்கி (George Rakousky 1821-67) என்பவர் எழுதிய மலைப்பிரயாணி (Mountain Traveler) என்னும் காவியம் மக்கள் துருக்கியராட்சியைக் கவிழ்ப்பதற்காக ஆயுதப்போர் தொடங்க வேண்டும் என்று கூறியது.

பல்கேரியக் கவிதை, கருத்துக்களிலும் நடையிலும் சுவையிலும் உச்சநிலை அடைந்தது ஹ்ரிஸ்ட்டோ போட்டெவ் (Hristo Botev 1848-76) என்னும் கவிஞருடைய பாடல்களிலேயே. இவருடைய ஹாட்ஜி டிமிட்டர் (Hadji Dimiter) என்னும் சுதந்திர கீதம் உலகமகா இலக்கியங்களுள் ஒன்ருக மதிக்கத் தகுந்தது. இவர் நாட்டு விடுதலைக்காக நடந்த யுத்தத்தில் போர்க்களத்தில் இறந்தார்.

.....................

பல்கேரியாவில் ஆண் புலவர்களுடைய நூல்களைவிடப் பெண் புலவர்களுடைய நூல்களே சிறப்புற்றவை என்பது குறிப்பிடத்தக்கது.

பல்கேரியா பொதுவுடைமை நாடாகிய பின்னர் எழுத்தாளர்கள் பெரும்பாலும் சோஷலிசக் கொள்கைக்கு ஆதரவாகவே நூல்கள் இயற்றி வருகின்றனர்.

தகவல் : கலைக்களஞ்சியம்.

———

# செந்தில்...காமர் வியன்துறை

[பேராசிரியர் கோ. வே. பெருமாள், எம்.ஏ. பி.டி.,]

**முன்னுரை :**

இன்பத் தமிழகத்தின் வரலாற்றிலே, 'சங்க காலமே' தங்க காலம்—'பொற்காலம்' என்னும் தகுதியைப் பெற்றுள்ளது. அக் காலத்தில் தோன்றிய நூற்களையே, 'சங்க இலக்கியம்' என்று சாற்றுகின்றனர். அவை, பொதுவாக, கி. பி. இரண்டாம் நூற்றுண்டிற்கு முன்னர் வரை, பன்னூறு ஆண்டுகளாக எழுதப்பெற்றிருந்த பாக்களின் தொகுப்பு என்பர். அவற்றைப் 'பத்துப்பாட்டு', 'எட்டுத்தொகை' என்றே பகருகின்றனர். அக் காலத்தில் இலங்கிய இலக்கண நூல், 'தொல்காப்பியம்' என்பர். அப் பழங்காலத்திலே, தென்தமிழ் நாட்டிலே, தென்னவர் ஆகிய பாண்டிய மன்னர்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகவே, பைந்தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டனர்; தலை, இடை, கடை என்னும் முச்சங்கங்கள் வைத்து முழுப்பணி புரிந்தனர். இப்பொழுது, நமக்குக் கிடைத்துள்ள பாட்டு, தொகை என்னும் நூற்கள், கடைச்சங்க காலத்தில் எழுந்தனவே என்பர்.

இச் சங்க நூற்கள் அனைத்தும், பழந்தமிழர் பண்பாட்டையும், நாகரிகத்தையும் பறைசாற்றுகின்றன; அந் நாளைய சிறந்த வரலாற்று நிகழ்ச்சிகளின் கொள்கலப் பேழைகளாகவே விளங்குகின்றன. இவற்றைப் பாடிய பாவலர் பலராவார். அவர்கள் பலகாலத்தினர்; பல இடத்தினர்; பல இனத்தினர் ஆவர். இப் புலவர்களில் ஆண்களும் உண்டு; பெண்களும் உண்டு. 'சங்க இலக்கியம்' தந்துள்ள மொத்தப் பாக்கள் 2381; இவற்றைப் பாடிய பெயர் தெரியவரும் பழந்தமிழ்ப் புலவர்கள் 473 என்பர்.[1]

இச் சங்கப் புலவர்களில், நூறு பாட்டுக்குக் குறையாது பாடியவர், ஐவர் ஆவர். அவர்கள்: (i) கபிலர்—235 பாக்கள்; (ii) அம்மூவனர்—127 பாக்கள்; (iii) ஓரம்போகியார்—110 பாக்கள்; (iv) பேயனர்—105 பாக்கள்; (v) ஓதல் ஆந்தையார்—103 பாக்கள். இனி, நூறு பாக்களுக்குக் குறைவாக—ஐம்பது பாக்களுக்கு மேலாகப் பாடிய பாவலர் நால்வர் ஆவார்.

1. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை பி.ஏ., பி.எல். பதிப்பு: 'சங்க இலக்கியம்'.

அவர்கள் : (i) பரணர்—85 பாக்கள்; (ii) மருதன் இளநாகனர்—79 பாக்கள்; (iii) பாலை பாடிய பெருங்கடுங்கோ—68 பாக்கள்; (iv) ஔவையார்—59 பாக்கள். இந்த ஒன்பதின்மரைத் தவிர, பிற சங்கப் புலவர் அனைவருமே ஐம்பது பாக்களினும் குறைவாகப் பாடியவர்களே யாவர்.

அகன்ஐந்திணை (மருதம்) :

மக்களின் வாழ்க்கை நெறிகளுக்கே இலக்கணம் அமைத்துள்ள மாண்பு, உலக மொழிகளிலே தமிழ்மொழி ஒன்றிற்கே உண்டு! அவற்றை 'அகப்பொருள்', என்றும், 'புறப் பொருள்' என்றும் அறிவிப்பர். 'அகப் பொருள்' வீட்டு (மனை) வாழ்வு குறிக்கும் 'இன்பம்' பற்றியும், 'புறப்பொருள்', நாட்டு வாழ்வு குறிக்கும் 'அறம்', 'பொருள்' பற்றியும் அமையும். இவற்றுள், 'அகம்' ஐந்து திணைகளாக வகுக்கப்பெற்றுள்ளது. இவை குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்பனவாம். இந்த 'அகன் ஐந்திணை'களின் உரிப் பொருள்களாக முறையே, இணைதல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்று வகுக்கப்பெற்றுள்ளன.[2] ஆதலின், 'மருதத்திணை'க்கு உரிய உரிப்பொருள் 'ஊடல்' (lover's feigned anger) ஆகும். இல்லற வாழ்வில், கணவனும் மனைவியும் இணைந்து மகிழ்ந்து இன்பமாக வாழுங் காலத்திலே, விளையாட்டிற்காகப் போலிப் பிணக்குகள் தோன்றலாம்! இதனையே, 'ஊடல்' அல்லது 'புலவி' என்னும் சொல்லால் நம் முன்னோர் குறிப்பிட்டனர். இதனை, திருக்குறள் காமத்துப்பாலின் இறுதியில் அமைந்துள்ள மூன்று அதிகாரங்கள் தெளிவுபடுத்துகின்றன; 'புலவி', 'புலவி நுணுக்கம்', 'ஊடல் உவகை' என்ற மூன்று தலைப்புக்களிலே முப்பது (30) குறட்பாக்கள் விளங்குகின்றன! ஊடல், காம இன்பத்திற்கு ஊக்கமும் ஆக்கமும் ஊட்டுவதாக அமையவேண்டும். ஊடல் இன்றேல் இன்ப வாழ்விலே சிறப்பு இல்லை என்பர்!

---

2. (i) தொல்காப்பியம் : 960. (பொருளதிகாரம் - அகத்திணை இயல் : கச உரிப்பொருள்) கழக வெளியீடு-கூசச.

(ii) கலித்தொகை பழைய வெண்பா :

"போக்(கு) எல்லாம் பாலை; புணர்தல் நறுங்குறிஞ்சி;
ஆக்கமளி ஊடல் அணிமருதம்—நோக்(கு) ஒன்றி
இல்லிருத்தல் முல்லை; இரங்கியபோக்(கு) ஏர்நெய்தல்;
புல்லுங் கலிமுறை கோப்பு."

**மருதன் இளநாகனுர்:**

எட்டுத் தொகை நூல்களில் ஒன்று 'கலித்தொகை' என்பது. இதனை, 'கல்விவலார் கண்ட கலி' என்றும், 'கற்றறிந்தார் ஏத்தும் கலி' என்றும் அறிஞர் பாராட்டுவர்! இந் நூலைத் தொகுத்தவர் 'அந்துவன்' ஆவர். இவர், புலமைச் சிறப்பால், முன்னும் பின்னும் சிறப்பு அடை கொடுத்து, 'நல்+அந்துவன்+ஆர்' நல்லந்துவனர் (நவ்வந்துவனர்) என்றே பெயர் வழங்கப் பெற்ருர். இன்பக் கருவூலம் என்று நினைக்கப் பெறும் 'கலித்தொகை' ஐம்பெரும் புலவர்கள் ஆக்கிய ஐந்து திணைகளால் ஆகிய கலிப்பாக்களைக் கொண்டுள்ளது. இம் முறையிலே, 'மருதக்கலி'யைப் பாடிய மதிப்பு, மருதன் இளநாகனுர் அவர்களுக்கே அமைந்தது.[3] மருதனிள நாகனுரும், நல்லந்துவனுரும் ஒரு காலத்தவர்களே ஆவர். இவர் அவர்மீது அளவற்ற அன்பு வைத்திருந்தார்; பாடலில் இணைத்துப் பாராட்டி மகிழ்ந்தார்:

"சினமிகு முருகன் தண்பரங் குன்றத்(து)
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை."[4]

தென்பாண்டி நாட்டிலே திகழும் 'திருச்செந்தூர்' அருகிலே, 'இளநாகனுர்' பிறந்திருக்க வேண்டும்![5] இளநாகனர் என்பதே இவர்தம இயற் பெயராகவும் இளமைப் பெயராகவும் இருந்திருக்க வேண்டும். இவர் கற்பன கற்று, சிறந்த புலவர்களில் ஒருவராக மிளிர்ந்திருக்க வேண்டும். மருதத்திணைப் பாக்களை ஆக்குவதிலே மாண்பு பெற்றிருந்தார் போலும்! 'கலித்தொகை'யின் 'மருதக்கலி' ஆக்கிய பொறுப்பு, இவரையே சார்ந்தது! ஆதலின், 'மருதன்' என்ற சிறப்பு அடைமொழி இவரைச் சேர்ந்திருக்கலாம், இவர் தந்தையின் பெயர் 'மருதன்' என்பர்! எனவே, இவ்விரு திறத்தாலும் இவர், 'மருதன் இளநாகனுர்' என்று மதிப்போடு பெயர் வழங்கப் பெற்றிருக்க வேண்டும்! மதுரை மாநகரிலே, மன்றம் (சங்கம்) வைத்து,

---

3. கலித்தொகை பழைய வெண்பா:

"பெருங்கடுங்கோன் பாலை; கபிலன் குறிஞ்சி;
மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழன்
நல்லுத் திரன்முல்லை; நல்லந் துவன்நெய்தல்
கல்விவலார் கண்ட கலி".

4. மதுரை மருதன் இளநாகனுர்—அகநானூறு: 59 (பாலை).

5. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை—புறநானூறு: 52 முன்குறிப்பு; பக். கரு௭. கழக வெளியீடு—சகூ௮.

தமிழ் வளர்த்த மாட்சி, பாண்டிய மன்னரையே சாரும்! அக்கோ நகரிலே, தமிழகத்தின் பல்வேறு இடங்களிலிருந்தும், பைந் தமிழ்ப் பாவலர்களும் புலவர்களும் தமிழ் ஆராய்வதற்காகவே வந்து வந்து கூடினர். இக் காரணத்தாலேயே, மதுரை மூதூர் 'கூடல்' என்னும் பெயரைப் பெற்றிருந்தது என்பர். அங்கே சென்று வாழும் வாய்ப்பு, திருச்செந்தூர்ப் புலவர் ஆகிய 'மருதன் இளநாகனுர்' பெற்றிருக்க வேண்டும். எனவே, 'மதுரை' என்ற புகழடை மொழியும் இவருக்கு வாய்த்திருக்க வேண்டும். இச் சிறப்பாலேயே இவர், 'மதுரை மருதன் இள நாகனுர்' என வழங்கப் பெற்றிருக்க வேண்டும்! இம் முப் பெயர் களுமே இந்த ஒரு புலவர்க்கே உரியதாக மிளிர்ந்திருக்க வேண்டும். சிலர், இம் முப் பெயர்களுமே மூன்று தனித்தனிப் புலவர்களை உணர்த்தலாம் என்று கருதுகின்றனர்!?! சங்க இலக்கியப் புலவர்களிலே, 'நாகனுர்' என்று பெயர் முடிபெறு வோர், பதினெவர் காணப் பெறுகின்றனர்!! ஆதலின், 'மதுரை மருதன் இளநாகனுர்' என்னும் திருப்பெயர், இவ் ஒருவரையே சாரும் என்று உறுதியாக நம்பலாம்.

'கூடல்' திருநகர் ஆகிய மதுரையிலே, பல வழிகளிலும் பெருஞ்செழிப்புப் பெற்ற முடிவேந்தராக, 'பாண்டியர்' வழி வழியே மிளிர்ந்தனர். ஆதலின், 'செழியன்' என்ற சிறப்புப் பெயர் பாண்டியர்க்கே உரியதாயிற்று! செழியர், பகைவர் மதில் அரண் பலவற்றை வென்றனர்; மாவீரம் பெற்றிருந்தனர். ஆதலின், மதுரையிலே வாழ்ந்த இளநாகனுர், பாண்டியன் செழியனின் அடுபோர் ஆற்றலை வியந்து, தம் பாட்டிடையே வைத்துப் பாராட்டியுள்ளார்:

"... ... ... ... நன்னுர்
அரண்தலை மதில் ஆகவும், முரசுகொண்(டு)
ஓம்(பு)அரண் கடந்த அடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூடல் ... ... ...".[6]

இப் பெரும் புலவரின் 'எச்சம்' ஆக, ஈராயிரம் ஆண்டு களுக்கு இப்பால், இன்றும் ஒளிர்வன பாக்களே ஆகும். இவர் பாடியனவாக 'எட்டுத் தொகை' சார்ந்த ஐந்து நூல்களிலே, 79 பாக்கள் உள்ளன.[7] இவற்றில் ஐந்து (5) பாக்கள் 'புறப் பொருள்' பற்றியன: 'புறநானூறு' என்னும் நூலிலே இடம்

6. மருதனிள நாகனுர்—நற்றிணை : 39 (குறிஞ்சி) : 7-10.

7. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை—சங்க இலக்கியம் II (1940), பாரி நிலையம், சென்னை-1. பக்கம் 1180—1194; மருதனிள நாகனுர் பாக்கள் : 2024—2102.

பெற்றுள்ளன. எஞ்சிய 74 பாக்களும் 'அகப் பொருள்' பற்றியன. அவை, அகநானூறு (23 பாக்கள்), கலித்தொகை—மருதம் (35 பாக்கள்), குறுந்தொகை (4 பாக்கள்), நற்றிணை (12 பாக்கள்) ஆகிய நூற்களில் இடம் பெற்றுள்ளன. இப் பாக்களின் வழியே, 'மதுரை மருதன் இளநாகனூர்' அவர்களின் புலமை நலன் புலனாகின்றது.

வாழ்க்கையின் பதிவேடே, இலக்கியம் ஆகும். இதனை இவர் பாடல்கள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன. இவர் முறையாகக் கற்று மூதறிவு பெற்றிருந்தார்; உலகியல் உணர்வோடு நூலியல் நுட்பங்களையும் நன்கு பட்டறிந்து நுகர்ந்திருந்தார்; மன்னவன்—தென்னவனிடம் மதிப்பும் அன்பும் வைத்திருந்தார்; பாண்டிய வேந்தனின் செழுமையையும் போர் வன்மையையும் நன்கு புரிந்திருந்தார்! மக்கள் ஆர்வத்தோடு மகிழ்ந்து கொண்டாடும் விழாக்களை, இவரும் துய்த்துப் போற்றினார். இவர் பாடியுள்ள பாக்கள் இலக்கிய நயம் மிக்கன; கற்பவர் கருத்தைக் கவர்வன; இவர் வாழ்ந்த காலத்தே வாழ்ந்தோர் பலரை அறிமுகம் செய்வன எனலாம். சிறப்பாக, இவர் பாக்களிலே, அந்துவன், வானவன் மறவன் பிட்டன், கோசர், மழவர், வேளிர், வாணன், வழுதி, மாவண் கழுவுள், கொங்கர், செழியன், திருமாவுண்ணி, வடபுல மன்னர், நாஞ்சில் வள்ளுவன் முதலியோர் பெயர்கள் பயின்றுவரப் பார்க்கலாம். 'கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி என்னும் பாண்டிய மன்னவன், போர் விரும்பி எழுகின்ற பெருமிதத்திற்கு, 'புலிவேட்டு எழு'வதை உவமையாக இவர் குறிப்பிட்டுள்ளார். அஃது உவகை மிகுவிக்கின்றது.[8] "வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன்; மெய் கூறுவல்" என்னும் இவரது பாடல் தொடர், பழந்தமிழ்ப் புலவரின் பண்பு மேம்பாட்டினைப் படம்பிடித்துக் காட்டுகின்றது![9]

செவியறிவுறூஉ:

புலவர் 'மதுரை மருதன் இளநாகனூர்' அவர்களின் புலமை நலத்திற்குச் சான்றாகப், புறநானூற்றுப் பாட்டு ஒன்றினை எடுத்துக் காட்டலாம். இதில், இவர், 'பாண்டியன் நன்மாற'னின் ஆற்றலைப் போற்றியுள்ளார்; அவனுக்கு உயர்ந்த அறவுரைகளை அறிவுறுத்தியுள்ளார்; அவனைப் பல்லாண்டுகள் வாழ

8. மருதனிள நாகனார்—புறநானூறு: 52.

9. மருதனிள நாகனார்—புறநானூறு: 139. நாஞ்சில் வள்ளுவனைப் பாடியுள்ளார்.

வேண்டி உளமார வாழ்த்தியுள்ளார். 'புறப்பொருளை' ஏழு திணைகளாகவே, 'தொல்காப்பியம்' பகுத்து உணர்த்துகின்றது. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பனவாம். இதில், இறுதியாக வைக்கப்பெற்றுள்ள 'பாடாண் திணை' (பாடு + ஆண் + திணை), பாடப்படுதற்கு உரிய புகழ்வாய்ந்த ஆண் மகனின் ஒழுகலாற்றினை உணர்த்துவது, ஆகும். பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்து கூறும் பகுதியையே, 'பாடாண்டிணை' (Theme of praising the hero) என்பர்.[10] இத் திணையுள் அமைந்துள்ள பல துறைகளில், 'செவியறிவுறூஉ' (Instruction in the path of virtue) என்னும் நீதிகூறும் பகுதியும் ஒன்றாகும். இதனைத் தொல்காப்பியம்,

"செவியுறை தானே,
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடன்எனச் செவியுறுத் தன்றே"[11]

என்றும், புறப்பொருள் வெண்பாமாலை,

"மறந்திரி(வு) இல்லா மன்பெருஞ் சூழ்ச்சி
அறந்தெரி கோலாற்(கு) அறிய வுரைத்தன்று"[12]

என்றும், புரியவைத்துள்ளன. புறப்பொருள் பாடாண்திணை—செவியறிவுறூஉ துறையிலே, பாண்டியன் நன்மாறனை இவர் பாராட்டியுள்ளார். 'ஆட்சிபுரிவோரின் நெஞ்சிலே ஆற்றல் மிகுந்த வீரத்தைவிட, அறநெறியே உரம் பெற்றிருக்க வேண்டும்' என்பர்.

"அறத்தினால் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிது! என்பது மனத்திடை வலித்தி"[13]

இவ்வாறு, முதல்நாள் போரில் தோல்வியுற்றுத் தனித்து நின்ற இராவணன் நிலைகண்டு, இரக்கங்கொண்டு, இராமன் நல்லறிவு

---

10. ஐயனார் இதனார்—புறப்பொருள் வெண்பாமாலை (பாடாண் டிணை), உ. வே. சா. பதிப்பு (1940)

"ஒளியும் ஆற்றலும் ஓம்பா ஈகையும்
அளியும் என்றிவை ஆய்ந்துரைத் தன்று"　　(கொளு, 189)

11. தொல்காப்பியம்: 1371; பொருள் - செய்யுளியல்: 113. கழக வெளியீடு—௧௯௪௪.

12. ஐயனாரிதனார் - புறப்பொருள் வெண்பாமாலை—பாடாண்டிணை' செவியறிவுறூஉ: கொளு: 221.

13. கம்பர்—இராமாயணம்—யுத்தகாண்டம்—முதற் போர்புரி படலம்—பாடல்: 225.

உறுத்தியதாகக் கம்பர் கட்டுரைத்துள்ளார்! இளங்கோ, "அரைசியல் பிழைத்தோர்க்(கு) அறம்கூற்(று) ஆகும்" என்று தம் சிலப்பதிகாரக் காப்பியத்தின் பதிகத்திலே (வரி : 55) குறிப்பிட்டுள்ளார்! வள்ளுவர்,

"அறன்இழுக்கா(து) அல்லவை நீக்கி, மறன்இழுக்கா
மானம் உடைய(து) அரசு"[14]

என்று ஆளுந்தலைவர்களுக்கு, அன்றே—கி. மு. 31 இலேயே—சொல்லி வைத்துள்ளார்! ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், திருச்செந்தூரில் தோன்றிய ஒப்பற்ற இப் புலவர், மதுரை மாநகரிலே, மாமன்னன் மாறனுக்கு, மதியிலே ஏறுமாறு அறிவுறுத்தியுள்ள அறவுரை, எல்லா நாடுகளின் ஆட்சித் தலைவருக்கும்—எல்லாக் காலத்திற்கும் ஏற்ற ஒத்த உரையாகவே மிளிர்வதைக் காணலாம்.

பாண்டியன் நன்மாறன் :

வீரவேந்தனாகவே, பாண்டியன் நன்மாறன் விளங்கினான்! வாழ்க்கையின் இறுதியிலே, இவன், உடல்நலன் பேணும் பொருட்டு, ஒரு தனி மாளிகையில் வாழ்ந்தான். அந்த இன்ப மாளிகை, சோலையினிடையே அமைந்த பூங்கா ஒன்றிலே, விசைப்பொறியமைந்த நீர்நிலை பெற்று, இலங்கியது! அங்கே ஓய்வெடுத்துத் துயில்வதற்கு என்றே அமைக்கப்பெற்றிருந்த பள்ளி ஒன்று இருந்தது. அதனை, 'இலவந்திகைப்பள்ளி' என்று அழைத்தனர்! அவ்விடத்திலே, 'நன்மாறன்' இயற்கை எய்தினான் போலும்! ஆதலின், அவ் வேந்தனை, பின்னாளில் புலவர்கள், 'பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்" என்று குறிப்பிடுவார் ஆயினர். இவனைப் பாடிய புலவர், ஐவர் ஆவர். அவர்களில், 'மதுரை மருதன் இளநாகனார்' என்னும் புலவர் மிகுந்த உரிமையும் ஆர்வமும் உடையவராய் மிளிர்ந்தார்போலும்! எனவே, இவர் அப் பாண்டியனுக்குத் தெளிவாகவும்—துணிவாகவும்—செவியறிவுறுத்தினார் எனலாம். அம் பாடல், புறநானூறு என்னும் நூலிலே பிறங்குவதைப் பார்க்கலாம்.[15]

மதுரையிலே, போராற்றல் மிகுந்த மாமன்னன் பாண்டியன் நன்மாறன் நலத்திலேயே நாட்டங் கொண்டிருந்தார், புலவர்

14. திருவள்ளுவர்—திருக்குறள் : 384. பொருட்பால்—இறைமாட்சி—39 : 4.

15. மருதனிளநாகனார்—புறநானூறு : 55.

மருதன் இளநாகனர். ஆதலின் அவன் வீரநெஞ்சிலே விழுமிய அறம் பதியுமாறு அறிவுரை கூற அவாவினர்; பாட்டு ஒன்று தீட்டினர்: (புறம் : 55).

"பூந்தார் மாற! களிறு (யானை), கலிமா (குதிரை), தேர், மறவர் (காலாள்—வீரர்) என்னும் நான்கு படையுடன் மாட்சிமை யுற்றதே, 'அரசின் கொற்றம்' (வெற்றி) ஆகும். ஆயினும், அரசின் கொற்றத்திற்கு, மாட்சிமையுற்ற அறநெறியே முதன்மை வாய்ந்தது ஆகும். ஆதலின், தன்னலங் கருதி, 'நம்மவர்' என்று செங்கோலுக்கு உலைவு தேடி விடாதே. பொது நலத்தைப் புறக்கணிக்கும் நிலையிலே, 'பிறர் தானே' என்று பிழை செய்து விடாதே. கதிரவன் போன்ற ஆண்மை, திங்களைப் போன்ற தண்பெருஞ் சாயல், வான்மழை போன்ற வண்மை ஆகிய மூன்றினையும் பெறும் ஆற்றல் பெறுவாயாக. எல்லாவற்றிற்கும் மேலாக, எல்லோரும் எல்லாச் செல்வமும் எய்துமாறு—இல்லாதார் இல்லை ஆகுமாறு (இல்லோர் கையற)—எளியோர் குழுவின் (இல்லாத வறியோர் கூட்டத்தின்)—சுற்றத்தின் (இல்லோர் ஒக்கல்) தலைவன் ஆகி, ஆட்சி புரிவாயாக. செந்தில் வியன்துறை மணலினும் பல ஆண்டுகள் நீ நீடுவாழ் வாயாக".

"... ... ... ... ...
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற!
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய மிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரும்என
நான்குடன் மாண்ட(து) ஆயினும், மாண்ட
அறநெறி முதற்றே, அரசின் கொற்றம்;
அதனால், 'நமர்'எனக் கோல்கோ டாது,
'பிறர்'எனக் குணங்கொல் லாது,
ஞாயி(று) அன்ன வெந்திறல் ஆண்மையும்,
திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்,
வானத்(து) அன்ன வண்மையும் மூன்றும்
உடையை ஆகி, இல்லோர் கையற,
நீடு வாழிய, நெடுந்தகை! ..."[16]

இவ்வாறு, இப் புலவர் இம் மன்னவனுக்கு நல்ல அறிவுரை நல்கியுள்ளார். இந்தச் 'செவியறிவுறூஉ—வாழ்த்து', எந்த நாட்டிலும்—எந்தக் காலத்திலும்—ஆளுவோருக்கு உணர்த்த வேண்டிய அரசியல் அறநெறி அல்லவா? இந்த 'நாகரிக

16. மருதன் இளநாகனர்—பாண்டியன் இலவந்திகைத் துஞ்சிய நன்மாறனைப் பாடாண்டிணை-செவியறிவுறூஉத் துறை; புறநானூறு—55 : 6-17.

அறிவு', ஆட்சியாளர் நெஞ்சிலே என்றென்றும் நின்று நிலைக்க வேண்டிய இன்றியமையாமையை, உலகம் உணர்வதாகுக. உணரின், பகைமை தோன்றுமோ? போர்—போராட்டம் வருமோ? உலக அமைதிக்கு இதனினும் உயர்ந்த மருத்துவம் உண்டோ? உன்னுங்கள்!

**செந்தில்...காமர் வியன்துறை:**

மதுரை மாநகரிலே, பாண்டியன் நன்மாறனை நெஞ்சார வாழ்த்தும் புலவர் பெருமானுக்குத் தாம் பிறந்து வளர்ந்த 'திருச்செந்தூர் கடற்கரைப் பெருந்துறை', தம் மனக்கண் முன்னர் நின்றிருந்தது போலும்! செந்திலின் 'கவர்ச்சி மிக்க வியன்துறை'க் காட்சி, அவர் சிந்தையிலே நிழலாடி நின்றிருக்க வேண்டும்! ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு இப்பால், கி.பி. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே வாழும் நமக்கும் அந் நாளைய 'காமர் (கவர்ச்சி மிகுந்த) வியன் (அகன்ற) துறை' எவ்வாறு இருந்தது என்று காட்டுவார் போலவே, செய்யுள் படைத்துள்ளார்! இவர்தம் இப் பாடல் தொடர்கள், அந்த மிகப் பழைய காலத்திலே, இவர் திருச்செந்தூரின் விரிந்த கடற்கரையிலே, எவ்வாறு, நின்று மகிழும் பேறு பெற்றார் என்பதை எளிதாக உணர்த்துகின்றன; இன்று நாம் செந்தூரில் வழிபடும் 'செவ்வேள்', அன்று 'நெடுவேள்' என்ற பெயரிலே நின்றுநிலை பெற்றிருந்த நீர்மையினைப் புரிய வைக்கின்றன!

ஒரு பசுவின் உடம்பெல்லாம் பால்வள வூட்டம் இருப்பினும், அதன் மடுவழியேதான், பாலைக் கறந்துகொள்ள இயலுகின்றது! இது போன்றே, இறைவனின் திருவருள் உலகெங்கும் நிறைந்திருப்பினும், அத் திருவருளைத் திருக்கோவில் சிலை உருவ வழிபாட்டிலே பெற்றுக் கொள்ள இயலும் என்று முற்றிலும், மிக முந்திய பழங்காலத்திலேயே மக்கள் நம்பினர். விரிந்து பரந்த ஒரு வெள்ளைச் சுவரை நினைவிலே கொள்ளுதற்கு எளிமையான முறை, அவ் வெண்சுவர் நடுவண் கரும்புள்ளி ஒன்றை இடுவதே ஆகும். அது போன்றே, உலகெங்கும் விரிந்து பரந்து நிறைந்துள்ள பேரருளை நினைத்து வழிபடற்கு, உருவ வழிபாட்டினை உண்டுபண்ணினர். இவ்வாறே, அறிஞர் பெருமக்கள், செந்தூரை மடுவாக மதித்தனர்; செவ்வேளை வெண்சுவர் கரும்பொட்டாகக் கருதினர்!

திருச்செந்தூர்க் கடல் துறையிலே, சில இடங்களில் ஆழம் வாய்ந்த தாழ்நீர்ப் பகுதி மிகுதி என்பர். கடல் அலையின் மேல் தோற்றம் வெண்ணிறமாகவே—வெண்தலைப் புணரி (கடல்) ஆகவே விளங்குகின்றது! முருகப் பெருமானின் திருவுருவச்

சீரடியை, கடல்திரை அலைக்கின்ற அழகு, 'அலைக்கும் செந்தில்' ஆகவே தருகின்றது! பிற கடற்கரை இடங்களைவிட, செந்தூர் கடற்கரை காமர் (அழகிய கவர்ச்சி) வாய்ந்து, விரிந்து அகன்று 'வியன்துறை' ஆகவே விளங்குகின்றது! இதனால், உலகின் பல்வேறு இடங்களிலிருந்தும் மக்கள் இங்கு அடிக்கடி வருகின்றனர்; நீராடித் தொழுகின்றனர்; பிணிபோக்கும் புகலிடமாகக் கொள்கின்றனர்; இங்கே இயற்கையழகு நிலைபெற்று நிற்பதாக நம்புகின்றனர்; அதனை, 'நெடுவேள் நிலைஇய செந்தில்' என்று நெஞ்சாரப் போற்றுகின்றனர். இங்கே இருக்கின்ற எக்கர் (மணல்மேடு), பண்டை நாளில் எவ்வாறு அமைந்தது? இக் கேள்விக்கு, அறிவியல் முறையிலே அழகிய விடை ஒன்று கிடைக்கின்றது! கொடிய சூறவளி—சூறைக் காற்று—கடுவளி பல்லாண்டுக் காலங்களாகவே அக்கடற்கரையிலே வீசிவீசி, மணலைக் குவித்துத் தொகுத்து உறைந்திருக்கவேண்டும். இந்த அடையாளம் - வடு - வாழுமாறு, அந்தச் 'செந்தில் வியன் துறை' அமைந்துள்ளது! ஆதலின், அது 'வடுவாழ் எக்கர் மணல்' ஆக வயங்கியது. இந்த இயற்கை யழகினையே, இளநாகனார், 'ஓர் அழகிய ஓவியம்' ஆக்கி உணர்த்தியுள்ளார்; 'பாண்டியன் நன்மாறன் அளவிடமுடியாத பல்லாண்டுகள் வாழ்வேண்டும்' என்று வாழ்த்தியுள்ளார்:

"... ... ... ...
நீடு வாழிய, நெடுந்தகை! தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறைக்
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுவாழ் எக்கர் மணலினும் பலவே."[17]

இதனால், மதுரை மருதன் இளநாகனார் உள்ளத்திலே திருச்செந்தூர் நிலைபெற்றிருந்த நீர்மையினை உணர்கின்றோம். இவ்வாறு, ஆறு அல்லது கடல்கரை மணலினும் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்தும் மரபு புதுமையானது இல்லை![18] ஆயினும், மதுரையிலே வாழ்ந்த புலவர் பெருமகனார்க்கு, தாம் பிறந்த பொன்னகரின் எண்ணம், பொருத்தமான நேரத்திலே தோன்றியது, வியப்பிற்குரிய புதுமையே ஆகும்! இல்லையா?

17. மருதனிள நாகனார்—புறநானூறு: 17 - 21.

18. (1) பரணர்—பதிற்றுப் பத்து (ஐந்து) - 48; சேரன் செங் குட்டுவனைப் பாடியது:

"பல்பொறி மார்ப! நின் பெயர்வா ழியரோ;
... ... ... ...
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே"

நிறைவுரை :

இறுதியாக, இந்தியப் பெருநிலத்தை ஆளும் பேறு பெற்றிருந்த ஆங்கிலர்கள் சிந்தையிலும், 'திருச்செந்தூர்' சீரிய இடம் பெற்றிருந்தது என்று தெரிகின்றோம்: அன்னவர்களின் சீர்த்த நெஞ்சையும் ஈர்த்த பெருமை செந்தில் மாநகர்க்கு அமைந்திருந்தது! அவர்கள், இந்த நல்லிடத்தை 'அழகு ஒளிரும் சீரிடம்' (the beautiful city) என்று ஆர்வம் பொங்கக் குறிப்பிட்டுள்ளனர். சென்னை மாநிலத்திலேயே - திருநெல்வேலி மாவட்டத்தின் தென்கரை வட்டத்தில் 'திருச்செந்தூர்' என்னும் கடற்கரைப் பட்டினம், அழகுத் திருநகராக மிளிர்கின்றது! இங்கே, அடிக்கடி, பயணிகள் பக்திச் சிறப்போடு வந்து, பணிந்து வழிபடுகின்றனர். கடற்கரையிலேயே திருக்கோவில் கட்டப் பெற்றுள்ளது; செல்வச் சிறப்புப் பெற்றுள்ளது! இக்கோவில் சுவர்களிலே, பழங்காலக் கல்வெட்டு எழுத்துக்கள் உள்ளன. அவற்றில், பழங்காலக் 'கொற்கைத் துறை' பற்றிய குறிப்புக்கள் காணப் பெறுகின்றன. இவ்வாறு, சென்ற நூற்றாண்டிலே எழுதப்பெற்ற ஆங்கிலர் குறிப்புக்கள் தெளிவிக்கின்றன.[19] இக் கடற்கரை, காமர் (அழகு) வியன் (பெருமை) தழுவிய 'முருகியல்' பெற்றுள்ளது! எனவே, எல்லா நாட்டவரும், எல்லா மொழியினரும், எல்லா மதத்தினரும், எல்லாக் காலத்தினரும் ஏத்திப் போற்றும் ஏற்றத்தினை, இச் 'செந்தில் காமர் வியன்துறை' என்றென்றும் பெற்று இலங்குகின்றது !

———

(ii) நெட்டிமையார்—புறநானூறு - 9 : 8 - 11. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது.

"எங்கோ வாழிய, குடுமி! ...
... ... ... ...
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

(iii) தாமற்பல் கண்ணனர் — புறநானூறு - 43 : 21 - 3. மாவளத்தான்-

"... ... சிறக்கவின் ஆயுள்
மிக்கவரும் இன்னீர்க் காவிரி
எக்கர் இட்ட மணலினும் பலவே" (அ.ம.தி.)

(iv) இளங்கோவடிகள் — சிலப்பதிகாரம் - 28 : 125 - 7. செங்குட்டுவனை மாடல மறையோன் வாழ்த்துவதாகப் பாடப் பெற்றுள்ளது).

"மன்னுள் வேந்தே! நின்வாழ் நாட்கள்
தண்ணான் பொருநை மணலினும் சிறக்க,
ஆழ்கடல் ஞாலம் ஆள்வோய்! வாழி."

19. Sir William Wilson Hunter, K.C.S.I., C.I.E., B.A., L.L.D., Imperial Gazetteer of India (1887) Volume XIII; P.323.

## அரசுத் தேர்வுத்துறை இயக்குநரின் அயல் நாட்டுப் பயணம்

தமிழக அரசுத் தேர்வுத் துறை இயக்குநரான திரு. கி. வேங்கட சுப்பிரமணியம், எம்.ஏ., பி.டி., அவர்கள் அண்மையில் இங்கிலாந்து நாட்டிற்குச் சென்று நான்கு மாதங்கள் தங்கி அரியதோர் ஆராய்ச்சியை நிகழ்த்தி மீண்டுள்ளார். இங்கிலாந்து நாட்டு அழைப்புக்கிணங்க இந்திய அரசும் தமிழக அரசும் இவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பியது இவர்தம் ஆற்றலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.



இட்ட பணி எதுவாயினும் அதனைச் செம்மையுறச் செய்து முடிக்கும் பாங்கினரான திரு. வேங்கட சுப்பிரமணியம் பேரறிஞர் அண்ணா அவர்களால் 1967 இல் சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டின் தனி யதிகாரியாக நியமிக்கப்பட்டவர். கல்வித் துறையில் மாவட்டக் கல்வி யதிகாரி பொறுப்பினின்று படிப்படியாக உயர்வு பெற்று 1975 முதல் தமிழக அரசுத் தேர்வுத் துறை இயக்குநராகப் பணியாற்றி வருகிறார். அத்துறையில் நியமிக்கப் பெற்ற முதல் இயக்குநர் இவரேயாவர்.

பொறுப்பு புதியதாயினும் அதிலும் பல புதுமைகளையும் புரட்சிகளையும் செய்தவர் இவர். பள்ளியிறுதித் தேர்வு முடிவுகளை மிகக் குறுகிய காலத்தில் வெளியிட்டு வருகிறார். அண்மையில் 'கடையருக்கும் உண்டிங்குக் கடைத்தேற்றம்' என்ற வகையில் 65 ஆண்டுகளாக உள்ள கொடிய விதிகளைத் தளர்த்திப் பள்ளியிறுதித் தேர்வில் தமிழ், ஆங்கிலம் ஆகியவற்றில் 40 வரைக்குப் பதிலாக 35 எடுத்தால் போதுமென்றும் ஒரு பாடத்தில் தவறிவிட்டால்கூட அதை மட்டும் எழுதித் தேறி, கல்லூரியில் தொடர்ந்து படிக்கப் பல்லாயிரக் கணக்கான மாணவர்களுக்கு அரிய வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்துள்ளவர் இவர்.

காணுதற்கினியர். இன்சொல்லர், எளிமையே உரு வானவர், சிறந்த பேச்சாளர்—தமிழ்—ஆங்கிலம் இரண்டிலும் சிறந்த கட்டுரையாளர். 'எல்லே வேலன்' என்ற எழில்மிகு பெய ரால் கருத்து வளமிக்க கட்டுரைகளைப் படைத்தவர். தமிழ் மொழி, இலக்கியம், கலை, பண்பாடு முதலியவற்றில் ஆர்வ முடையவர். திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்ட ஆவணக்களரிப் பதிவாளராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற திரு. வே. கிருஷ்ணசாமிப் பெரியாரின் திருக்குமரர். தமிழ்மறை யாம் தேவார, திருவாசகப் பாக்களில் ஈடுபட்டுத் தம் தந்தை யாரின் இறுதிச் சடங்கு நாளன்று தேவாரப் பாடல்களை ஓது வாரைக் கொண்டு ஓதச் செய்தவர்.

உலக நாடுகள் கல்விக்காகச் செலவிடும் பொருள் எந் தெந்த வகையில் முழுமையாக மக்களுக்குப் பயனளிக்கிறது என்பதை ஆயும் பணிக்காகப் பிரிட்டிசுப் பேரரசால் அழைக்கப் பெற்ற இவர் 29—9—1977 அன்று சென்று ஆய்வை முடித்துக் கொண்டு 3—2—1978 இல் நலமே திரும்பினர். இவர் தம் ஆய்வை யார்க் பல்கலைக்கழகத்தில் மேற்கொண்டு திறம்பட முடித்து நூலாக உருவாக்கியுள்ளார். அஃது அப் பல்கலைக்கழகத் தால் வெளியிடப்பட்டு உலக நாடுகள் அனைத்திற்கும் அனுப்பப் பெறும். இத்தகைய ஆய்வு உலகத்திலேயே இப்போதுதான் முதன் முறையாக நடத்தப்பெறுகிறது. இப் புத்தகத்திற்கு முன்னுரை எழுதியுள்ள இலண்டன் நாட்டுக் கல்வித்துறைப் பேரறிஞரான பேராசிரியர் திரு. இயான் லிஸ்டர் (Ian Lester) 'இப் புத்தகம் உலகநாடுகள் முழுவதற்கும் பயன்படக்கூடிய நூலாகும்' என்று பாராட்டியுள்ளார்.

இயக்குநர் ஆய்வு செய்ததோடு பல்கலைக் கழகங்களிலும் பல்வேறு சங்கங்களிலும் தமிழ்மொழி, இலக்கியம் பற்றிய சொற்பொழிவுகளை ஆற்றியுள்ளார். இலண்டன் பி. பி. சி. வழங்கும் தமிழோசையில் இருமுறை சொற்பொழிவாற்றி யுள்ளார். இரண்டாம் முறையாகப் பொங்கல் திருநாளன்று பொங்கல் வாழ்த்தை உலக முழுவதுமுள்ள தமிழர்கட்குக் கவிதை வடிவில் ஒலிபரப்பியுள்ளார்.

இலண்டன் பயணத்தின் தலைசிறந்த பயனாக இவர் கருதுவது தமிழ்ப் பேரறிஞர் எடின்பரோ பல்கலைக்கழக மொழி யியல் பேராசிரியர் டாக்டர் ஆர். ஈ. ஆஷர் அவர்களைச் சந்தித்து இலண்டனில் தமிழ்ப் பேரவை (Tamil Council) ஒன்றை அமைப்பதற்காகத் திட்டமிட்டுள்ளதுதான். கூடிய விரைவில் இந்திய, தமிழக அரசுகளின் உதவியுடன் இப் பேரவை தமிழர்

மொழி, இலக்கியம், கலை, பண்பாடு முதலியவற்றைப் பரப்புவதற்காக இலண்டனில் தொடங்கப்பெறும். இவற்றைப் பற்றி அறிந்துகொள்ளத் துடித்துக்கொண்டிருக்கும் பிரிட்டிச நாட்டுக் குடிமக்களுக்கு இது பேருதவியாக அமையும்.

இலண்டனில் வாழும் தமிழர்கள் தமிழ்ப் பண்பாட்டைப் பரப்புதற்கு அரும்பாடுபட்டு வருவதை இவர் பாராட்டுகிறார். பி. பி. சி. தமிழோசையில் பணியாற்றும் திரு. சங்கா சங்கர மூர்த்தி, 'ராமா சென்னை உணவுவிடுதி'யின் வழித் தமிழக உணவால் மேனாட்டாரை ஈர்த்து வரும் திரு. மன்னார்குடி இராம லிங்கம், லீட்ஸ் நகரில் அரிய மருத்துவப்பணி யாற்றிவரும் தாம்பரம் முனுசாமி முதலியாரின் உடன்பிறந்தாரின் மருமகனும் வேலூர் ஆட்சித் தலைவராக இருந்த திரு. கிருபாகரன், ஐ. ஏ. எஸ் அவர்களின் தம்பியுமான டாக்டர் முத்துக்குமார், இலண்டன் பரோடா வங்கியின் தலைமையதிகாரியான கடைய நல்லூர் கிருஷ்ணன் 'மலர்ச்சி' என்னும் இதழைத் தொடங்க விருக்கும் பாண்டிச்சேரி தமிழர் அப்பாசாமி ஆகியோர் குறிப் பிடத் தக்கவராவர்.

இலண்டன் மாநகரிலுள்ள பல நூலகங்களைப் பார்வை யிட்டு அவை மக்களால் அருமையாகப் பயன்படுத்தப் பெறுவது கண்டு இவர் மனமகிழ்ச்சியுற்றார். திருக்குறள் ஆங்கில மொழி பெயர்ப்பையும் மு. வ. தெளிவுரையையும் நூறு படிகள் மேனாட் டறிஞர் பெருமக்களுக்கு அன்பளிப்பாக அளித்து அவர்கட்குத் 'திருக்குறளின்' பெருமையை உணர்த்தி வந்திருக்கிறார். பயனுடைய தமிழ்ப் பண்பாட்டுப் பயணத்தை முடித்து மீண்ட இயக்குநர் அவர்கள் அனைவருடைய பாராட்டுதலுக்கு முரியவர்.

---

## பேறறிஞர் அண்ணா சிலை திறப்பு

சென்னை, நுங்கம்பாக்கம் வள்ளுவர் கோட்டத்தின்முன் திராவிட முன்னேற்றக் கழகம் திட்டமிட்டபடி பேறறிஞர் அண்ணாவின் அமர்ந்து படிக்கும் கோலத்தில் அமைந்துள்ள புதிய சிலையைத் தலைவர் டாக்டர் கலைஞர். மு. கருணாநிதி அவர்கள் 3-2-1978 மாலை 6 மணியளவில் திறந்து வைத்தார். இச் சிலை திறப்பு விழாவில் பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் தலைமையில் திரு. சாதிக்பாட்சா முதலிய தலைவர்கள் உரையாற்றினர். தொடக்கத்தில் பேறறிஞர் அண்ணா பற்றிய கவியரங்கமும் நடைபெற்றது.

# பொங்கலோ பொங்கல்!*

[திரு கி. வேங்கட சுப்பிரமணியம்]

ஆங்கில நாட்டின்
அலகிலாப் புகழின்
தாங்கிய மகுடத்
தலைநகர் இலண்டன்
பாங்குடன் எழுப்பும்
பைந்தமிழ் ஓசை
ஓங்கவே, பொங்கல்!
உதித்ததென் கவிதை!

வானத்துச் சூரியனை
வாசலுக்கு நாமழைத்துக்
கோவே! உயிர்க்குலத்தின்
கோடி வணக்கமும்
தானே உனைச்சாரும்
தைப்பொங்கல் உண்பாயே!

என்றே விருந்தளிக்கும்
இன்றமிழர் திருநாளில்
ஒன்றுரைக்க விரும்புகிறேன்
உலகெல்லாம் வாழ்கவென்று!
வாழும் உயிர்க்கெல்லாம்
வற்றாத ஒளிகல்வி
சூழும் சுடர்வெள்ளம்
சூரியனைப் போன்றதம்மா!...

ஏட்டுப் படிப்பின்றி
இயல்பான வாழ்வுரம்
ஊட்டும் படிப்பே உலகாளும்!
உன்னதத்தைக் கொண்டுதரும்
காட்டும் பொருளெல்லாம்
ஞாலத்தை வாழவைக்க
மீட்டும் படியளப்போம்
மேலான கல்வியினால்!...

கற்றதனால் ஆயபயன்
கைகளுக்கு வரவேண்டும்!
உற்றவழி உழைப்போடு
உயர்கல்வி தரவேண்டும்

பெற்றவர்கள் கடமையிது
பிறந்தவர்கள் உரிமையிது
நற்றவத்தாள் தமிழன்னை
நாடும் பெருமையிது!

பொங்கலோ பொங்கல்!
பொங்கலோ பொங்கல்!
பொன்தமிழ் உலகெலாம்
பொங்கலோ பொங்கல்!

எங்கணும் உழைப்பின்
இனியநல் உறவின்
சங்கமம் போலெழில்
சமைத்திடும் திருநாள்!
பொங்கலோ பொங்கல்!...

எண்ணும் எழுத்தும்
இரண்டறக் கலந்து
பண்புடன் மனையறம்
பலித்திடும் ஒருநாள்
பொங்கலோ பொங்கல்!

உழுதவன் பணியால்
உயர்ந்தது உலகம்
தொழுகுவம் ஏர்முனை
தொழிலே தெய்வமாம்!
பொங்கலோ பொங்கல்!

செங்கதிர்க் கனலியின்
சிறந்த ஒளியினால்
மங்களம் நிறைந்தது
மாநிலம் உயர்ந்தது!
பொங்கலோ பொங்கல்!
பொன்தமிழ் உலகெலாம்
பொங்கலோ பொங்கல்!!

---

* இப் பாடல் 14-1-78 இல் இலண்டன் B.B.C. தமிழோசையில் ஒலிபரப்பப்பட்டது.

# திருவள்ளுவர் திருநாள் விழாவும் திருக்குறள் நூல்காட்சியும்

தமிழக அரசு இவ்வாண்டு திருவள்ளுவர் திருநாள் விழாவைச் சீரும் சிறப்புமாக 15—1—78 அன்று சென்னை, வள்ளுவர் கோட்டத்தில் நடத்தியது. இவ் விழாவில் தமிழக ஆளுநர் மேதகு பிரபுதாஸ் பட்வாரி, தமிழக முதல்வர் மாண்புமிகு திரு. எம். ஜி. இராமச்சந்திரன், நிதியமைச்சர் திரு. கி. மனோகரன், கல்வி அமைச்சர் திரு. செ. அரங்கநாயகம், சுற்றுலாத்துறை அமைச்சர் ஆர். எம். வீரப்பன் முதலியோர் கலந்து கொண்டனர்.

விழாவை யொட்டித் 'திருக்குறள் நூல் காட்சியினை' வள்ளுவர் கோட்டத்தின் ஆராய்ச்சிக் கூடத்தில் அமைக்குமாறு சென்னை மறைமலையடிகள் நூல் நிலையத்தைத் தமிழக அரசு கேட்டதற்கிணங்கக் காட்சியும் அமைக்கப் பெற்றிருந்தது. முன்னரும் 1976 சூலை 9, 10, 11 ஆம் நாள்களில் தமிழக அரசும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் இணைந்து நடத்திய திருக்குறள் கருத்தரங்கிலும் மறைமலையடிகள் நூல் நிலையம் இத்தகைய சிறப்பு மிக்க திருக்குறள் நூல் காட்சியை அமைத்தது.

விழாவில் திருக்குறள் நூல்காட்சியை நிதியமைச்சர் திரு. கி. மனோகரன் திறந்து வைத்தார். கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள், பொதுமேலாளர் திரு. இரா. கல்யாண சுந்தரம், நூலகர் திரு இரா. முத்துக்குமாரசாமி ஆகியோர் காட்சியைக் கண்டு களித்த தமிழக ஆளுநர். திரு. பிரபுதாஸ் பட்வாரி, தமிழக முதல்வர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன், மற்றும் சுற்றுலாத்துறை அமைச்சர் திரு. ஆர். எம். வீரப்பன், செய்தி பொதுத் தொடர்புத் துறைச் செயலர் திரு. கிருட்டிணசாமி முதலியோர்க்குக் காட்சியை விளக்கிக் கூறினர்.

காட்சியில் திருக்குறள் தொடர்பாக 1812 முதல் இது நாள்வரை வெளிவந்துள்ள மூல நூல்கள், உரைகள், ஆராய்ச்சிகள், தழுவல்கள், கதை, கட்டுரை, நாடகங்கள் உலக மொழிகள் 22 இல் வெளிவந்துள்ள நூற்றுக்கு மேற்பட்ட மொழி பெயர்ப்புக்கள், டாக்டர். ஜி. யு. போப் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய மூன்றையும் மொழிபெயர்க்கப் பயன்படுத்திய மூல நூல்கள், இவற்றை உருவாக்கிய ஆசிரியர்களின் படங்கள்—யாவும் இடம் பெற்றிருந்தன. காட்சியை அறிஞர் பெருமக்களும், பொதுமக்களும் 15, 16ஆகிய இரு நாள்களிலும் ஐயாயிரத்திற்கு மேற்பட்டவர்கள் கண்டின்புற்றனர். தமிழக அரசுச் செய்தித் திரைப்படத் துறையினர் காட்சியைப் படமெடுத்தனர். தொலைக்காட்சியிலும் இஃது ஒளி பரப்பப்பெற்றது.

விழாவில் காலையில் டாக்டர். நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற கருத்தரங்கில் டாக்டர். வ. சுப. மாணிக்கம், மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், திரு. மா. சண்முக சுப்பிரமணியம், டாக்டர். பா. நடராஜன், திரு. மு. சண்முகம் பிள்ளை, திருமதி. இராஜேஸ்வரி நடராஜன், திரு. க. த. திருநாவுக்கரசு ஆகியோர் கலந்து கொண்டனர்.

மாலையில் தமிழக ஆளுநரும் முதல்வரும் கலந்து கொண்ட நிகழ்ச்சியில் திருவாளர்கள் அகிலன், க. த. திருநாவுக்கரசு ஆகியோருக்குப் பாராட்டும், திருவாளர்கள் மயிலை சீனி வேங்கடசாமி, கவிஞர் சுரதா முதலிய ஐந்து தமிழறிஞர்கட்கு மாதம் ரூபா நூறு உதவித் தொகை வழங்கும் தொடக்க நிகழ்ச்சியும் இடம் பெற்றன.

காட்சியைத் திறந்து வைத்த நிதியமைச்சர் அவர்கள் கழகம் வெளியிட்டுள்ள திருக்குறள் கையடக்கப் பதிப்பைப் பாராட்டிப் பள்ளி மாணவர்கள் ஒவ்வொருவர் கையிலும் அஃது இடம்பெறுதல் வேண்டுமென்று கூறினர்.

---

## அனைத்துலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மூன்றுவது மாநாடு

திக்கெலாம் புகழும் திருநெல்வேலிச் சீமையின் பழம்பெரும் கடற்கரைப் பட்டினமான காயற் பட்டினத்தில் 1978 சனவரி 13, 14, 15 ஆகிய மூன்று நாள்களிலும் அனைத்துலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மூன்றுவது மாநாடு சீருடனும் சிறப்புடனும் நடைபெற்றது. இதில் தமிழகத்திலுள்ள இஸ்லாமிய இலக்கியப் பேரறிஞர்கள் கலந்து கொண்டதோடு இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற வெளி நாடுகளிலிருந்தும் இஸ்லாமிய அறிஞர்கள் கலந்து கொண்டது தனிச் சிறப்பாகும். குறிப்பாக அரபு நாட்டுத் தூதுவர்கள் மாநாட்டில் பங்கேற்றனர். தமிழக அமைச்சர்கள் அரங்க நாயகம், எட்மண்ட், ராஜா முகமது ஆகியோர் விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தனர். இலங்கை யமைச்சர் மூவரும் விழாவில் கலந்து கொண்டனர்.

நீதிபதி எம். எம். இஸ்மாயில் அவர்கள் மூன்று நாள் விழாவைத் தொடங்கி வைத்தார்கள். பேராசிரியர் அப்துல் கபூர் தலைமை தாங்கினர். மாநாட்டை யொட்டி நடைபெற்ற கருத்தரங்குகளில் முப்பதுக்கு மேற்பட்ட அறிஞர்கள் ஆய்வுக் கட்டுரைகள் படித்தனர். கவியரங்கில் பல கவிஞர்கள் கலந்துகொண்டனர். விழாவிலே திருச்சி முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் கலந்துகொண்டு பேசியது குறிப்பிடத்தக்கது. மாநாட்டையொட்டி இஸ்லாமியத் தமிழ் இலக்கிய், சமய நூல்களின் காட்சியும் அமைக்கப் பெற்றிருந்தது.

மாநாட்டை யொட்டிச் சில நூல்கள் வெளியாயின. மாநாட்டு மலர் சிறப்பான இஸ்லாமியத் தமிழ் இலக்கிய ஆய்வுரைகளைத் தாங்கி வெளிவந்தது. இதுவரை வெளிவந்துள்ள இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல்களின் பெயர்கள் தாங்கிய ‘இஸ்லாமியத் தமிழ் நூல் அட்டவணை’ என்ற நூல் பயனுடையதாகும். விழாவில் தமிழ் நாட்டிலுள்ள இஸ்லாமிய இலக்கிய அன்பர்கள் திரளாகக் கலந்துகொண்டனர். இம் மாநாட்டைப் பேராசிரியர் சி. நயினர் முகம்மது தலைவராகவுள்ள இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கழகம் சிறப்பாக நடத்துவதற்கு ஏற்பாடு செய்திருந்தது.

---

# வள்ளுவர் கோட்டத்தில்
# மறைமலையடிகள் நூல் நிலையத்தார் அமைத்த
# திருக்குறள் புத்தகக் காட்சி (15-1-'78)



தமிழக ஆளுநர் மேதகு பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் பார்வையிடுகிறார். நூலகரும், கழக ஆட்சியாளரும், செய்தி பொது மக்கள் தொடர்பு இயக்குநர் திரு. என். கிருஷ்ணமூர்த்தி, ஐ. ஏ. எசு. அவர்களும், உடன் நிற்கின்றனர்.



தமிழக முதல்வர்
மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள்
நூற்காட்சியினைப் பார்வையிடுதல்.



திருக்குறள் நூற்காட்சியினைத் தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு கி. மனோகரன், எம். ஏ., அவர்கள் திறந்து வைத்துப் பார்வையிடுதல். சுற்றுலாத்துறை அமைச்சர் மாண்புமிகு ஆர். எம். வீரப்பன் அவர்களும் உடன்நிற்றல்

## திருக்குறட் செல்வன் இரா. ஈசுவரன் சிவஞானபோத அவதானம் அரங்கேற்றல் (30—1—78)



தவத்திரு மகாலிங்கத் தம்பிரான் அவர்கள் முன்னிலையில் திருக்குறட் செல்வன் சிவஞானபோத அவதானம் செய்தல். கழக ஆட்சியாளர் தலைமை தாங்குகிறார்.

# திருக்குறள் செல்வன் திரு. ஈசுவரனின் சிவஞான போத அவதானம்

காரைக்குடிக் கருகிலுள்ள கண்டர மாணிக்கத்தில் வாழும் பத்து வயது நிரம்பாத திருக்குறள் செல்வன் திரு. இரா. ஈசுவரன் அவ்வூர் உயர்பள்ளியில் ஆறும் வகுப்பில் பயிலும் மாணவன். அவனுடைய தந்தை திரு. ம. இராமச் சந்திரன் பி. ஏ., எல். டி. அப் பள்ளியில் தலைமை யாசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். திரு. ஈசுவரன் கடந்த மூன்று ஆண்டுகளில் திருக்குறள், நாலடியார், அபிராமி அந்தாதி, கந்தரனுபூதி முதலிய நூல்களைக் கற்று அவதானம் செய்து வருகிறான். அவற்றில் எவ்வகைக் கேள்வி கேட்பினும் உடனுக்குடன் விடையிறுக்கும் பேராற்றல் பெற்றுத் திகழ்கிறான்.



கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களுடன் திரு ஈசுவரனுக்கு ஓராண்டிற்கு முன் தொடர்பு ஏற்பட்டது. நான்கு திங்கட்கு முன் திரு. ஈசுவரனிடம் சிவஞானபோத அவதானம் செய்ய வேண்டுமென்று ஆட்சியாளர் கேட்டுக் கொண்டார். அதற் கிணங்க ஈசுவரனும் சிவஞான போதத்திலுள்ள 12 சூத்திரம், அவற்றிற் குரிய அதிகரணங்கள், வெண்பாக்கள், விளக்கங்களைக் கற்றான்.

'சிவஞான போத அவதான அரங்கேற்றம்' 30—1—78 திங்க ளன்று சென்னை தியாகராய நகர் தருமபுர ஆதீன பிரசார மடத்தில் தவத்திரு. மகாலிங்கத் தம்பிரான் அவர்கள் முன்னிலையில் கழக ஆட்சியாளர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூடியிருந்த அறிஞர்கள் ஒரு மணி நேரம் சிவஞான போதத்தில் எண்ணைக் கூறிப் பாட்டைக் கேட்டல், பாட்டைக் கூறி எண்ணைக் கேட்டல், முதல் சொல், முடிவுச் சொல் கூறி முழுப் பாட்டையும் கேட்டல், சூத்திரம் கூறி வெண்பாக்களைக் கேட்டல் போன்று பல வினாக்களைத் தொடுத்தனர். ஈசுவரனும் உடனுக்குடன் விடையிறுத்தது கூடி யிருந்த அனைவரையும் வியக்கச் செய்தது. பின்னர்த் திருக்குறள், நாலடியார், அபிராமி அந்தாதிகளிலும் வினாக்கள் கேட்கப் பெற்றன. அவதானச் செல்வனும் துணிந்து சரியான விடைகளை அளித்தான்.

அவனைப் பாராட்டிக் கழக ஆட்சியாளர், தவத்திரு. மகாலிங்கத் தம்பிரான், கவிஞர் தா. கோவேந்தன் ஆகியோர் பேசினர். ஆட்சி யாளர் அவர்கள் அளித்த ரூ. ஐம்பதையும் கவிஞர் தா. கோவேந்தன் வழங்கிய ரூ. பத்தையும் தம்பிரான் அவர்கள் அவதானச் செல்வ னுக்கு வழங்கினர். புலவர்கள் ஆறுமுகம் ஆகியோரும் இந் நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர்.

———

## வாழ்க செந்தமிழ்ச் செல்வி

[பேராசிரியர், ந. சேதுரகுநாதன்]

செந்தமிழ்ச் செல்வி திசைதிசையெ லாஞ்சென்றும்
வந்துநம் இல்லத்தை வாழ்த்துவள்காண்—முந்துபல
ஊழிக்கும் முந்தியசீர் ஓவாத் தமிழை
வாழியென வாழ்த்துவமே வா. 1

மூவா வுலகிற்கும் முன்றோன்றி மூவாத
தேவா வமிழ்தத் திருத்தமிழே—ஓவாத
இன்புப் பெருமழையே இன்செந் தமிழ்ச்செல்வி
அன்புப் பெருக்கே யருள். 2

தூய இனிய தொடர்கட் டுரைபலவும்
ஆய இனிய அரும்பொருளும்—மேய
இனிய புகழ்ச்செந் தமிழ்ச்செல்வி என்றும்
கனிய புகழ்வழங்கிக் கா. 3

கற்றறிய வொண்ணாத கட்டுரையின் மாண்பெல்லாம்
வெற்றி மிகவழங்கு மேன்மைமிகு—கொற்றங்
குறையாத செந்தமிழ்ச் செல்வி குலாவி
முறையாக வாளங்கள் முன். 4

திருவரங்க வண்ணல் திறத்தால் பிறந்து
தருவரங்கர் சுப்பையா தாமே—பெருவரமாப்
போற்றி வழங்கப் புகழ்வழங்கும் செல்விநீ
ஏற்றமுடன் வாழி இனிது. 5

செந்தமிழ்ச் செல்வி விளங்குந் திருவீடு
முந்துபுகழ் கண்ட முறைவீடு—வந்து
திருமகளும் நாமகளும் சேர்ந்திருப்ப வென்றும்
பெருமகிழ்வாய் வாழ்வர் பெரிது. 6

தன்மை குறையாமல் தாவேதும் இல்லாமல்
நன்மை விளைய நடக்கின்ற—மென்மை
இனியதமிழ் அன்னமே எந்தமிழ்ச் செல்வி
மனியருள்நீ வாழி மகிழ்ந்து. 7

வாழிய செந்தமிழ்ச் செல்வி வளத்துடனே
வாழிய சைவசித் தாந்தம் வளர்கழகம்
வாழிய அன்பினொடும் இன்பினொடும் வாழியவே
வாழிய எல்லாம் மகிழ்ந்து. 8

———

## மறைமலையடிகள் நூல் நிலையத்தில் ஆராய்ச்சியாளர்கள்

சென்னை மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு அவ்வப்போது, எம். ஃபில், எம். லிட், பி. எச். டி. போன்ற ஆய்வுப் பட்டங்களுக்கு ஆய்வு செய்யும் ஆய்வாளர்கள் வருகை தருகின்றனர். கடந்த சில ஆண்டுகளாக நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வாளர்கள் அமெரிக்கா, இங்கிலாந்து, செக்நாடு, பிரான்சு, மலேசியா, இலங்கை போன்ற வெளிநாடுகளின் பல்கலைக் கழகங்களிலிருந்தும், தில்லி, பம்பாய், உசுமானியா, வெங்கடேசுவரா, மைசூர், காளிகட், சென்னை, அண்ணுமலை, மதுரை, திருவனந்தபுரம் போன்ற இந்தியப் பல்கலைக் கழகங்களிலிருந்தும் வந்து நூலகத்தைத் தங்கள் ஆய்விற்காகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அவரவர் ஆய்வு செய்யும் பல்வேறு தலைப்புக்களில் அவரவர்க்குத் தேவையான அரிய நூல்கள் நூலகத்திலிருப்பது கண்டு வியந்து போற்றுகின்றனர்.

பல்கலைக் கழகங்கள் மட்டுமன்றி உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டு நிறுவனம் (புதுவை), சென்னை தொல்பொருள் துறை போன்ற நிறுவனங்களில் ஆய்வு செய்வோரும் பட்ட மேற்படிப்பு மாணவர்களும் ஆய்வேடுகளை உருவாக்க இந் நூலகத்தைப் பெரிதும் பயன்படுத்துகின்றனர். பல்லோர் நாடும் பழமரமாக இந்த நூலகம் இலங்குகின்றது.

———

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-ச, உ0எ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு கழக ஆட்சியாளர் அவர்கள் பிப். 78 | 100 | 00 |
| ,, கழக மேலாளர் ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் | 5 | 00 |
| ,, தென்னவன், செயலர், பெங்களூர்த் தமிழ்ச் சங்கம், பெங்களூர் | 5 | 00 |
| ,, Dr. சாமி நரசிம்மன், 13, வசந்தா ரோடு, தாராபுரம் | 5 | 00 |
| ,, இரா. பாலசுப்பிரமணியன், தமிழ் ஆசிரியர், தேவங்கா உ. நி. ப., கோவை | 5 | 00 |

# செய்திகளும் குறிப்புக்களும்

## திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி—தமிழ்த் திருநாள்

சென்னை நக்கீரர் கழகச் சார்பில் நடைபெறும் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் தமிழ்த் திருநாளாகிய பொங்கல் திருநாள் **14-1-78** இல் பவழக்காரத் தெரு கல்லூரிப் பணிமனையில் திரு. கா. எ. அருணசலம் எம். ஏ., பி காம் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. பேராசிரியர் இ. மறைமலை எம். ஏ. அவர்கள் இலக்கியச் சொற்பொழிவாற்றினுர்கள். கழகத் துணைத் தலைவர் திரு சு. சங்கரலிங்கம் பி. எசி. பொங்கற் செய்தி வழங்கினுர்கள். கல்லூரி ஆசிரியப் பெருமக்களுக்குக் கழக வெளியீடுகளான திருக்குறள் நாட்காட்டியும், திருக்குறள் நாட்குறிப்பும் கரும்புடன் கல்லூரி மாணவர்கள் வழங்கினர். இவ் விழாவினை யொட்டிச் சுவைநீர் விருந்தொன்றும் நடைபெற்றது.

## அரசாங்கக் கோப்புக்களும் குறிப்புக்களும் தமிழிலேயே இருக்கவேண்டும்

“ஆட்சித் துறையில் எல்லாப் பிரிவுகளிலும் தமிழையே பயன்படுத்த வேண்டும் என்பதே அரசின் நோக்கம். ஆனுல், நாம் எதிர்பார்த்த அளவு வேகமாக இப் பணி நடைபெறவில்லை. காரணம் சில அதிகாரிகளுக்குத் தமிழ்மொழி தெரியவில்லை. அதிகாரிகள் போதுமான தமிழறிவு பெறும்படி செய்ய அரசாங்கம் திட்டமிட்டுள்ளது. இன்னும் மூன்று திங்களில் இத் திட்டம் நிறைவேறிவிடும். இனிச் சட்டப் பேரவையில் வைக்கப்படும் கோப்புக்களும் குறிப்புக்களும் தமிழிலேயே இருக்கவேண்டும் என அரசு ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.” என்று **5-2-78** இல் சென்னையில் நடைபெற்ற **32** ஆவது தமிழரசுக் கழக ஆண்டு விழாவில் பேசிய தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் குறிப்பிட்டார்.

## அனைத்து இந்திய ஒலிபரப்புத் துறையின் பொன் விழா

அனைத்திந்திய ஒலிபரப்புத் துறையின் **50** ஆவது ஆண்டு விழா **8-1-78** ஞாயிற்றுக் கிழமையன்று சென்னைப் பல்கலைக்கழக நூற்றுண்டு விழா மண்டபத்தில், தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. நடுவண் அரசின் செய்தி ஒலிபரப்புத் துறைகளின் அமைச்சர் எல். கே. அத்துவானி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினுர். எரிபொருள் துறை அமைச்சர் பா. இராமச்சந்திரன் முதன்மை விருந்தினராக இருந்தார்.

## கல்லூரிகளில் தமிழ் பயிற்று மொழி—புதிய திட்டம்

ஆங்கிலக் கல்வியின் இன்றியமையாமையினை வலியுறுத்தும் அதே நேரத்தில் **1981-82** ஆண்டு முதல் கல்லூரிகளில் மூன்று ஆண்டுப் பட்டப் படிப்பில் தமிழையே பயிற்று மொழியாக்குவதெனத் திட்டமிடப்பட்டிருப்பதாகவும், **1979** முதல் புகுமுக வகுப்புக்கள் நீக்கப்படும் எனவும் அண்மையில் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் கருத்து தெரிவித்துள்ளார்.

## கோயிற்பட்டி திருவள்ளுவர் மன்ற 6-வது ஆண்டு நிறைவு விழா

வள்ளுவர் மன்ற 6ஆவது ஆண்டு நிறைவு விழா 28-1-78இல் கோயிற்பட்டி வள்ளுவர் திடலில் புலவர் மணி இரா. இளங்குமரன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழறிஞர் அறுவர் பல்வேறு தலைப்புக்களில் பாட்டரங்கு நடத்தினர். 29-1-78 இல் திரு. பெ. இராமையா அவர்கள் திருக்குறள் நினைவுக்கலை நிகழ்ச்சியினை நடத்தினர். புலவர் திரு. இரா. அரங்கசாமி எம். எசி. அவர்கள் தலைமையில் பரிசளிப்பு விழாவும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் பட்டி மன்றமும் நடைபெற்றன.

## மதுரைப் பல்கலைக்கழகத்தில் திருவள்ளுவர் விழா

24-1-78 இல் மதுரைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் திருக்குறள் ஆய்வகத்தின் சார்பாகப் பல்கலை நகர் டாக்டர் மு. வரதராசனார் அரங்கில் திருவள்ளுவர் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. துணைவேந்தர் திரு. சை. வே. சிட்டிபாபு அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். நாவலர் நெடுஞ்செழியன் புது நூல்களை வெளியிட்டுத் தொடக்கவுரை ஆற்றினார். தொழில் நுட்பக் கல்வி இயக்குநர் டாக்டர் திரு. வா. செ. குழந்தை சாமி அவர்கள் கருத்தரங்கிற்குத் தலைமை தாங்கினார்கள். வள்ளல் வெள்ளைச்சாமி நாடார் அவர்கள் விழாவில் பங்கு கொண்டு உரையாற்றினார்.

## சமற்கிருதத்திற்கு ஆக்கம்!

தமிழ்நாட்டில் சமற்கிருதப் புலவர்கட்குப் பொருளுதவி அளிக்கும் வகையில் 1977-78 ஆம் ஆண்டிற்கு நடுவண் அரசு 2·38 நூறாயிரம் ரூபா அனுமதி வழங்கியுள்ளது. மேலும் 207 சமற்கிருதப் புலவர்கட்கு இவ்வுதவியினை வழங்கத் தமிழக அரசு செய்துள்ள முடிவுக்கு நடுவண் அரசின் கல்வித்துறை உதவ முன்வந்துள்ளது.

## தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் விருது வழங்கும் விழா

சிறந்த கலைஞர்களுக்கு விருது வழங்கும் வகையில் 25-1-78 இல் சென்னை இராசாசி மண்டபத்தில் நடைபெற்ற தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் விழாவிற்கு ஆளுநர் மேதகு பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் தலைமை தாங்கிக் கலைஞர்களுக்குப் பரிசுகள் வழங்கினார். முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் காலஞ்சென்ற அறிஞர்களின் உருவப் படங்களைத் திறந்து வைத்தார். 34 கலைஞர்கட்கு 1977-78 ஆம் ஆண்டிற்குரிய 'கலைமாமணி' விருதினை வழங்கிச் சிறப்பித்தார். விருது பெற்ற கலைஞர்களுள் முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம், குருவாயூர் பொன்னம்மாள் ஆகியோர் குறிப்பிடத் தக்கோர் ஆவர். அமைச்சர் மாண்புமிகு ஆர். எம். வீரப்பன் அவர்கள் கலைஞர்களைப் பாராட்டிப் பேசினார்.

———

# மதிப்புரை

## வாழ்வும் இலக்கியமும்

[ஆசிரியர் : க. த திருநாவுக்கரசு; வெளியீடு : மணியகம், கோட்டூர்த் தோட்டம், சென்னை-85; விலை : ரூ. 4-75.]

'தமிழ் வளர்த்த ஆங்கிலப் பேராசிரியர்' என்பது முதல் 'கி. பி. 2000' என்பது ஈறான ஒன்பது இலக்கியக் கட்டுரைகளின் தொகுப்பாய் அமைந்தது இந் நூல். இதன்கண் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் யாவும் 'நூலகம்' 'நல்லறம்', 'கலைஞன்' முதலிய இதழ்களிலும், சில மலர்களிலும் வெளிவந்தவையாகும். தெளிவான நடையில் அமைந்துள்ள கட்டுரைகள் யாவும் ஆசிரியருடைய பல்துறை அறிவின் வெளிப்பாடாக விளங்குகின்றன. ஆராய்ச்சியாளர்க்கும் தமிழன்பர்கட்கும் பயன்படும் சிறந்த நூல்.

## வீரமாமுனிவர் கலம்பகம்

[ஆசிரியர் : எழில் வண்ணன் (துரை. சுந்தரமூர்த்தி); வெளியீடு: தமிழ் இலக்கியக் கழகம், திருச்சிராப்பள்ளி-1; விலை ரூ. 2-50.]

இத்தாலி நாட்டினின்றும் தமிழ்நாடு போந்து தமிழைப் பயின்று இலக்கண இலக்கிய அகராதி, உரைநடை நூல்கள் பலவும் ஆக்கித் தமிழ்ப் பணியாற்றிச் சிறப்புற்ற வீரமா முனிவரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு இயற்றப்பட்டுள்ளது இச் சிற்றிலக்கியம். ஆற்றெழுக்கான பாடல்களால் யாக்கப்பட்டிருக்கின்றது.

## அரவிந்தன் கவிதைகள் (3ஆம் தொகுதி)

[ஆசிரியர் : மு. வை. அரவிந்தன்; வெளியீடு: இலட்சுமி பதிப்பகம், 3, பவழக்காரத் தெரு, சென்னை-1; விலை : ரூ. 2-25.]

'இசையரங்கம்', 'காதல் பாதையிலே', 'பூங்கொத்து' எனும் முப்பெரும் பகுதிகளில் பல்வேறு தலைப்பின்கீழ் அமைந்த எளிய இனிய இசைப் பாடல்களைக் கொண்டு இந்நூல் விளங்குகின்றது. பாடல்கள் சில வானொலியில் இசைத்தனவும், சில இதழ்களில் மணம் பரப்பியனவும், சில பாட்டரங்கம் ஏறினவும் ஆகும். பாவலரின் எண்ண ஓட்டமும் பாவொழுங்கும் பாராட்டற் பாலன.

## முத்துக் கவிதைகள்

[ஆசிரியர் : இளங்கவி முத்துசாமி; வெளியீடு : சந்திரோதயம், 8/11-ஆ, சீரங்கம்மாள் தெரு, சென்னை-21; விலை : ரூ. 2.00.]

பக்திப் பகுதி, இயற்கைப் பகுதி, தலைவர்கள் பகுதி, கவிஞர்கள் பகுதி, காதல் பகுதி, சமுதாயப் பகுதி என்னும் பெரும்பகுதிகளில் சிறுசிறு தலைப்புக்களில் பாடல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. 'ஸ்ரீ'கள் நிறைந்திருக்கின்றன. எனினும் ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.



# கழகப் புதிய வெளியீடுகள்

குலசேகர பாண்டியன் இயற்றிய

## மதுரை மீனும்பிகை மாலை - அருஞ்சொற்பொருள்

இந் நூல் குலசேகர பாண்டிய மன்னனுல் இயற்றப்பெற்றது. மதுரைமா நகரிற் கோயில் கொண்டிருக்கும் அங்கயற்கண்ணம்மை மீது பாடப்பட்ட 30 பாடல்களைக் கொண்டது. எளிதிற் பொருள் விளங்கப் புலவர் இளங்குமரன் அவர்களால் அருஞ்சொற் பொருள் விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது. ரூ. 1 25

## மதுரை மீனுட்சியம்மை சந்தத்திருவடி மாலையும் திருவடிப் பத்தும்— குறிப்புரையுடன்

ஆசிரியர் : சோழ வந் தான் அரசஞ் சண்முகனுர்

இந் நூல் இருபதாம் நூற்றுண்டின் முதுபெரும் புலவரும் நுண்மாண் நுழைபுல மிக்க புலவருமான சோழவந்தான் அரசஞ் சண்முகனுர் அவர்கள் மதுரை அங்கயற்கண்ணி அம்மைமீது பாடிய 32 சந்தப் பாடல்களைக் கொண்டது. பாடல்கள் திருப்புகழ்ச் சந்தப் பாடல்களைப் போல் சுவைபட எழுதப்பட்டுள்ளன. இப் புலவர் பெருமான் இளமைப் போதில் இயற்றிய 'திருவடிப்பத்து' என்னும் 10 அருட்பாடல்கள் இந்நூலின் பின் இணைப்பாகச் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூல் கழகத்தின் சிற்றிலக்கியப் பாது காப்புத் திட்டத்தின் முதல்நூலாக வெளிவருகின்றது. எனவே, இதனைத் தமிழ் அன்பர்களும் நூலகங்களும் வாங்கி இத்திட்டத் திற்கு ஆதரவு தர வேண்டியது மிக மிக இன்றியமையாததாகும்.

ரூ. 3 75

## வானெலியில் வள்ளுவர் ஓவியங்கள்

(கல்வி உரையாடல் நாடகங்கள்)

ஆசிரியர் : வித்துவான் கோ. வே. பெருமாள், எம்.ஏ., பி.டி.

இதில் 'செய்ந்நன்றி அறிதல்' 'அடக்கம் உடைமை' 'அறன் வலியுறுத்தல்' 'தெரிந்து தெளிதல்' என்னும் நான்கு தலைப்புக் களில் வள்ளுவரின் குறளோவியங்கள் பள்ளி மாணவர்க்கேற்ப உரையாடல் நாடகங்களாக எழுதப்பட்டுள்ளன, இவை திருச்சி வானெலி நிலையத்தினின்று ஒலி பரப்பப்பட்டவை. இவ் உரை யாடல் நாடகங்கள் மாணவர்கள் படித்தற்கும் நடித்தற்கும் ஏற்றவை. ரூ. 3 00

## சிவப்பதிகள் வரலாறு—(வழி விளக்கங்களுடன்)

தேவாரப் பாடல்பெற்ற சிவப்பதிகளுக்குச் சென்று இறைவனை வழிபடவும், சுற்றுலாவாகச் சென்று சிவப்பதிகளின் மாண்புகளை அறியவும், சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது இந்நூல். சிவப் பதிகளுக்கு அண்மையில் உள்ள புகைவண்டி நிலையங்கள், இருப்புப் பாதை எண் முதலியன பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்டுள்ளன. முக்கியமான 22 திருக்கோயில்களின் படங்கள் இணைக்கப் பட்டுள்ளன. சுற்றுலாச் செல்வோர் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டிய இன்றியமையாத நூல். அழகிய பதிப்பு.

விலை ரூ. 6 75

இருப்புப்பாதை விளக்கப் படங்களைக் கொண்ட தனி ஏட்டுடன் விலை ரூ. 7 50

தனி ஏட்டின் விலை ரூ 1 00

மதிவு எண் : M. 4899

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| சித்தாந்தத் தெளிவியல் —சி. அருணை வடிவேலு முதலியார் | 8 | 50 |
| சித்தாந்த வினுவிடை ” | 8 | 00 |
| திருமந்திரம் (1-3) —சி. அருணை வடிவேலு முதலியார் உரை | 15 | 00 |
| சிவப்பிரகாசம் ” | 0 | 75 |
| அருங்கலச்செப்பு—க. ப. அறவாணன் உரை | 9 | 00 |
| யாழ்முரிப்பண்—வா. சு. கோமதிசங்கர ஐயர் | 7 | 00 |
| முருகன் பெருமை—ந ரா. முருகவேள் | 2 | 50 |
| வல்லாளராசன் இசைநாடகம்—S. A. K. துர்க்கா | 4 | 00 |
| திருக்குறளில் அறிவுத்துறைகள் | 22 | 00 |
| மண்ணின் மணம்—வாசவன் | 25 | 00 |
| இலக்கியச் சிந்தனைகள்—சிலம்பொலி செல்லப்பன் | 5 | 00 |
| காவல் துறையின் கதை—தமிலன் | 12 | 50 |
| குதிரைகள் ஓடுகின்றன—தமிலன் | 10 | 00 |
| சக்கரவாகம்—மாரி அறவாழி | 7 | 50 |
| நெஞ்சம் ஒன்று நினைவு நான்கு—பி. எல். ராஜேந்திரன் | 7 | 50 |
| தமிழ் நாவல்களில் குடும்பசக்தி—தி. பாக்கியமுத்து | 6 | 00 |
| பூங்காவனப் பிரளயம்—சாமுவேல் தேவநாடகம் | 5 | 00 |
| இலக்கியமும் கல்வெட்டும்—சதாசிவபண்டாரத்தார் | 5 | 00 |
| திருக்கோலம்—கி. வா. ஜகந்நாதன் | 7 | 50 |
| சிலப்பதிகார ஆய்வுரை—ம. பொ. சிவஞானம் | 12 | 00 |
| தெய்வதரிசனம்—கண்ணதாசன் | 1 | 50 |
| வீட்டு வைத்தியம்—எஸ். ஏ. குசையா | 2 | 50 |
| வாழ்வும் இலக்கியமும்—க. த். திருநாவுக்கரசு | 4 | 75 |
| வேதாந்த சாஸ்த்ர ரத்னவலி (9 நூல்கள்) —சு. அ. இராமசாமிப் புலவர் | 5 | 00 |
| ஆரம்பக் கல்வி—கொடுமுடி ராஜகோபாலன் | 4 | 50 |
| வடமொழி நூல்களில் சைவசித்தாந்தம் —கோ. சுந்தரமூர்த்தி | 5 | 50 |
| V. O. Chidambaram Pillai—R. A. Padmanaban | 4 | 00 |
| Guru Jnana Sambandhar | 1 | 00 |

அப்பர் அச்சகம், சென்னை-1.